# வைதிக தர்ம வர்த்தனி



மலர் 13
இதழ் 5

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

விகாரி௵
மாசிமீ

## விகாரி௵ மாசிமீ சிசிரருது. உத்தராயணம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | சனி | ப்ர. | 41-58 | மக. | 44-35 | அ.சி. | — |
| 2 | 14 | ஞா. | த்வி. | 42-08 | பூர. | 46-13 | சி.அ. | த்வி. |
| 3 | 15 | திங். | த்ரி. | 41-22 | உத். | 46-55 | சி. | த்ரி. |
| 4 | 16 | செவ். | சது. | 39-38 | ஹஸ். | 46-38 | சி. | சது. |
| 5 | 17 | புத. | பஞ். | 36-58 | சித். | 45-30 | சி. | பஞ் |
| 6 | 18 | வியா. | ஷஷ். | 33-30 | சுவா. | 43-35 | அ.சி. | ஷஷ் |
| 7 | பிப்ரவரிமீ 19 | வெ. | ஸப். | 29-13 | விசா. | 40-53 | சி. | சப். |
| 8 | 20 | சனி | அஷ். | 24-12 | அனு. | 37-27 | சி. | அஷ் |
| 9 | 21 | ஞா. | நவ. | 18-33 | கேட். | 33-25 | ம.அ. | ந. த. |
| 10 | 22 | திங். | தச. | 12-27 | மூல. | 29-02 | சி. | ஏகா. |
| 11 | 23 | செவ். | ஏகா. | 6-05 | பூரா | 24-25 | சி. | த்வா. |
|  |  |  | த்வா. | 59-40 |  |  |  |  |
| 12 | 24 | புதன் | த்ர. | 53-35 | உத்தி. | 19-55 | அ.சி. | த்ர. |
| 13 | 25 | வியா. | சசி. | 48-02 | சிர. | 15-47 | சி. | சசி. |
| 14 | 26 | வெள் ● | அமா. | 43-25 | அவி. | 12-20 | சி. | அமா |
| 15 | 1960௵ 27 | சனி | ப்ர. | 40-00 | சத. | 9-57 | அ.ம. | ப்ர. |
| 16 | 28 | ஞா. | த்வி. | 37-58 | பூரட் | 8-50 | சி.அ. | த்வி. |
| 17 | 29 | திங். | த்ரி. | 37-40 | உத்ர. | 9-17 | சி. | த்ரி. |
| 18 | 1 | செவ். | சது. | 39-03 | ரேவ. | 11-48 | அ.சி. | சது. |
| 19 | 2 | புதன் | பஞ். | 42-10 | அசு. | 15-08 | ம.சி. | பஞ். |
| 20 | 3 | வியா. | ஷஷ் | 46-40 | பர. | 20-26 | சி.ம. | ஷஷ் |
| 21 | மார்ச்மீ 4 | வெள். | ஸப். | 52-17 | க்ருத். | 26-50 | சி.ம. | சப். |
| 22 | 5 | சனி | அஷ் | 58-25 | ரோ. | 34-00 | அ.சி. | அஷ் |
| 23 | 6 | ஞா. | நவ. | 60-00 | மிருக. | 41-25 | சி. | நவ. |
| 24 | 7 | திங். | ,, | 4-35 | திரு. | 48-23 | சி.அ. | தச. |
| 25 | 8 | செவ். | தசமி | 10-10 | புன. | 54-35 | சி. | ஏகா. |
| 26 | 9 | புதன் | ஏகா. | 14-45 | பூச. | 59-37 | சி. | த்வா |
| 27 | 10 | வியா. | த்வா. | 17-58 | ஆயி. | 60-00 | சி. | த்ர. |
| 28 | 11 | வெள். | த்ர | 19-45 | ,, | 3-15 | ம. | சசி. |
| 29 | 12 | சனி ○ | சசி. | 20-00 | மகம் | 5-23 | அ.சி. | பௌ |
| 30 | 13 | ஞா. | பௌ. | 18-52 | பூரம் | 6-10 | சி.அ. | ப்ர. |

10, 25௳ ஏகாதசி, 12, 27௳ ப்ரதோஷம், 13௳ மஹாசிவராத்ரி, 14௳ அமாவாஸை, 20௳ க்ருத்திகை, 28௳ மாசி மகம்.

**தை பிறந்தது—நல்ல வழிதான் திரக்கவேண்டும்.**

यतो धर्मः ततः कृष्णः यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | விகாரி௵ மாசிமீ | இதழ் 5



## பொருள் அடக்கம்.




வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.



காரியாலயம் :
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

## ஐவரும் நூறுமானாலும் பகைவருக்கு நாம் 105 பேர்களே!

கோஷயாத்ரை என்ற வியாஜமாக காட்டிலுள்ள பாண்டவர் மனதைப் புண்படுத்த வந்தான் துர்யோதனன். ஒரு கந்தர்வன் அவன் கர்வத்தை அழித்து அவனைக் கட்டிச்செல்ல, தர்மர், பீமனை அழைத்து அவனை விடுவித்து வரச்சொன்னார். நான் செய்யவேண்டிய வேலையை கந்தர்வன் செய்வதால் ஏன் துர்யோதனனை விடுவிக்க வேண்டும்? என்றான் தம்பி பீமன். அப்பொழுது தர்மர் சொன்ன சொல்லே தலைப்பிலுளது. நமக்குள் சண்டையானால் பாண்டவர் ஐவர். கௌரவர் நூறு. மாற்றானுடன் போரானால் நாம் நூற்றைந்து பேர் ஸஹோதரர் என்றார். மாற்றானுக்கு இடங்கொடேல்.

இந்த உபதேசத்தை அனைவரும் கைப்பற்றி ஆஸ்திக்யத்தை (வேத தர்மத்தை) நிலைநாட்டவேண்டிய காலமிது. வேதம் மறைகிறது! ஸ்மிருதி மங்குகிறது! கர்மானுஷ்டானம் இறக்கும் நிலையிலிருக்கின்றது! ஸதாசாரம் அழிகின்றது! முன்னோர் தேடிய செல்வம், பாரத நாட்டை குன்றின் மேலிட்ட விளக்குபோல் என்றும் விளங்க வைத்த க்ஞான தீபம், இவை அஸுர ஸம்பத்தால் அழிக்கப்படுகிறது. இதுவா ஸமயம் தம்தம் கொள்கையை நிலைநிறுத்த? மதப்போர் புரிய? குறை கூற?

என் மடமே சிறந்தது! என் தெய்வமே சிறந்தது! என் ஸம்ப்ரதாயமே உயர்ந்தது! என்று அவரவர் நம்புவதிலும் கூறுவதிலும் எழுதுவதிலும் பிரசாரம் செய்வதிலும் எவருக்கும் ஆக்ஷேபமில்லை. உலகில் தர்மத்தைக் காக்க முக்கரணங்களாலும் முயற்சிக்கும் முநிவருக்கொப்பான ஸாதுக்களையும் மற்ற மதத்தையும் தாக்கி இழிவாகப் பேசுவதும் எழுதுவதும் ஆஸ்திகருக்கு அழகாகுமோ! மாற்றான் நகைக்க இடமளிக்குமல்லவா?

அநாவச்யமாக இவைகளைத் தாக்குபவர் தன்னைச்சார்ந்தவைகளை உயர்த்துவதாக எண்ணலாம்! ஆனால் தெய்வமும் தர்மமும் ஆஸ்திகரும் அதை ஏற்காததுடன், இவர் எண்ணத்திற்கு மாறாக தன்னைச் சார்ந்ததையே இவர் தாழ்த்துகிறார், என்றே கருதுகின்றனர்! கற்பரசி தன் கணவனையே உயர்ந்தவன்! மன்மதன்! பிரஹஸ்பதி! சக்ரவர்த்தி! என எண்ணுவதையும் கூறுவதையும் எவரும் ஏற்பர். மறுக்கவும் மாட்டார்! அண்டைவீட்டு புருஷன், மிக மட்டமானவன்! குரூபி! மூடன்! தரித்ரன்! எனக்கூறினால் அவள் கற்பரசி ஆவாளா? உத்தமியானால் மற்றோரை ஏன் பார்ப்பாள்?

ஆதலால் எவரையுமே நிந்திக்காதே என்று கூறும் உயர்ந்த மதத்தில் பிறந்த நாம், பகுத்தறிவுள்ள நாம் அன்ய மடம், அன்ய தெய்வம், அன்ய ஸம்ப்ரதாயம், அன்ய ஜாதி, வகுப்பு, மதம் முதலியவைகளை நிந்திக்காமல் இருத்தல் அவச்யமாம். பொறுமையும் விட்டுக்கொடுக்கும் தன்மையும் தேவ ஸம்பத்தாம்!

---

***எம் பணியை நாம் செய்தாக வேண்டும்.***

***முதலில் சிகைபற்றி சிறிது கவனியுங்கள்.***

# தார்மிகச் செய்திகள்.

நமது பத்ரிகையில் நவரஸப்பகுதி எழுதும் "அக்ஷயபாணி" எனும் ஸ்ரீ ஸோ. ஜயராமன், M. A., சிதம்பரம், சீர்காழி, கடவாசல், கைவிளாஞ்சேரி, அம்பத்தூர் முதலிய இடங்களில் பக்தி, ருக்மிணீ கல்யாணம், வேங்கடேச கல்யாணம், த்ரௌபதி மாநஸம் ரக்ஷணம், க்ருஷ்ணன் தூது முதலிய விஷயங்களை உபன்யாஸம் செய்தார். பரிவுடன் பலர் கேட்டு இன்புற்றனர்.

சென்னை ஸ்ரீ பூர்ணாநந்தநாத ஸ்ரீ வித்யாபீடத்தில் தைமீ ஸ்ரீ ச்யாமளா நவராத்ரிபூஜை நன்கு நடத்தி ஸ்ரீ ராஜச்யாமளாம்பிகா நவராத்ரி மஹோத்ஸவ வெளியீடு என்ற ஒரு நூலையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

சைன ஸம்ஸ்கிருத வித்வான் ஸ்ரீ காஞ்சி ஜகத்குருவை தர்சித்து ஸம்ஸ்கிருதத்தில் பேசினர்.

ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் விரைவில் சித்தூர், அடயபலம், கும்பகோணம், தஞ்சை, திருச்சி முதலிய ஊர்களுக்கு விஜய யாத்ரை செய்யலாமென அறிகிறோம்.

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு சங்கராசார்யாள் வடாற்காடு, தென்னார்காடுகளில் விஜயம் செய்தார்கள். ஹைதராபாத் சென்று சென்னைக்கும் விஜயம் செய்வார்களென கூறப்படுகிறது.

முத்ராதிகாரிகள் நியமனம்: கல்கத்தாவில் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களையும் ஸ்ரீ ராமச்சந்திரன் அவர்களையும் முத்ராதிகாரிகளாக ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் நியமித்திருக்கிறார்கள். இந்த பிரகடனம் தென்னிந்திய பஜனை ஸமாஜத்தின் ஸ்ரீ ராதாகல்யாண உத்ஸவத்தன்று பொதுஜனங்களுக்கு அறிவிக்கப்பட்டது.

## ஸ்ரீ காமகோடி பீடாதிபரின் அம்ருதமொழி.

எங்கும் பிரதோஷகாலத்தில் சிவன் நடனம் செய்கிறார்! விசேஷமாக சிதம்பரத்தில் நடராஜரது நர்த்தநம் மிக ஆநந்தமானது. வ்யாக்ரபாதர் புலி. பதஞ்சலி பாம்பு. பயங்கரமான இவைகளுக்கும் நடநமின்ப மளிக்கிறது. நந்திக்குக் கொம்பும் கால்களுமுண்டு. வியாக்ரபாதருக்கு கால்களுண்டு. பதஞ்சலிக்கு இரண்டுமில்லை. கண்ணும் காதும் அவருக்கு ஒன்றே. கண்ணை மூடினால் காது கேளாது. நடராஜ தாண்டவத்தை அவர் நன்கு அநுபவிப்பவர். ஸதா தியாநம் செய்பவர். அவர் நடராஜ நடனத்திற் கேற்க 8 சுலோகமியற்றினர். அவரைப் போல் அவைகளுக்கும்—தீ.தா—என்ற கொம்பும் காலுமில்லை. ஸ்ரீ மடத்திலும் பிரதோஷகாலத்தில் அந்தப் பாராயணம் நடக்கிறது. மாலையில் சிவஸேவை செய். ஆநந்தமுண்டாகும். (ஸதஞ்சித.........ஹ்ருதி பஜ).

பி. சுப்ரமண்யஅய்யர், கடகம்.

**ஆண் குழந்தைகளுக்கு மாசியில் பூணல் போடுங்கள்.**

# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம் ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி.)

## அக்னியின் நாக்கு 7.

அக்நிக்கு நாக்கு மொத்தம் ஏழு. அவைகளின் பெயரும் இருக்குமிடமும் எந்தெந்த நாக்கில் எந்தெந்த கர்மா செய்யவேண்டுமென்றும் கீழே குறிக்கப்பட்டுளது. ஹிரண்யா என்னும் நாக்கு மேற்குதிக்கிலுள்ளது. அதில் விவாஹ ஹோமத்தைச் செய்யவேண்டும். (2) கநகா என்பது அக்னியில் மத்தியிலுள்ளது. அதில் ஜாத கர்மா செய்யவேண்டும். யக்ஞங்களையுமிதில் தான் செய்யவேண்டும். (3) ரக்தா என்பது வடக்குதிக்கிலுள்ளது. அதில் உபநயநம் செய்யவேண்டும். (4) க்ருஷ்ணு என்பது தெற்கிலுள்ளது. அதில் பித்ரு கார்யங்களைச் செய்யவேண்டும். (5) கிழக்கிலுள்ளது ஸுப்ரபா என்பது. இதில் ஸர்வகாம்ய கர்மாக்களையும் செய்ய வேண்டியது. (6) அதிரக்தா என்னும் நாக்கு அக்னி மூலையிலுள்ளது. அதில் உக்ரகர்மாக்களை (ஆபிசாரம் முதலியன) செய்ய வேண்டியது. (7) பஹுரூபா என்னும் நாக்கு ஈசான்ய திக்கிலுள்ளது. அதில் ஶாந்தி கர்மாக்களைச் செய்யவேண்டியது. இம்மாதிரியாக ஏழுநாக்குகளையும் அறிந்து செய்வது மிக க்ஷேமகரம்.

அதிரக்தா என்னும் நாக்கில் திலஹோமமும், பஹுரூபா என்பதில் கிருஹ ஸம்பந்தமானதும் புஷ்பஹோமமும்ரக்தா என்பதில் சருஹோமமும் ஸுப்ரபா என்பதின் ஸக்து (நெல் வறுத்த மா அல்லது பொரிமா) ஹோமமும் மற்றுமுள்ள மூன்றுநாக்குகளில் ஆஜ்யாஹுதிகளும் செய்யலாம் என்றும் விதி இருக்கிறது.

ஹோமத்தை நான்கு விதமாகச் சொல்கின்றனர். அதாவது (1) ஆத்மார்த்தம ஔபாஸநம் வைஶ்வதேவம் முதலியன. (2) தன் ஸ்தீரிக்காகச் செய்வது. பும்ஸுவநம் ஸீமந்தம் முதலியன. (3) தம்பதிகள் இருவருக்காகச் செய்வது. ஸ்தாலீபாகம் முதலியன. (4) புத்திரனுக்காகச் செய்வது ஜாத கர்மா முதலியன.

---

விவாஹமாகாத ருதுவான பெண்களை ரக்ஷிக்கவும்.

ஆஜ்யஹோம காலத்தில் ஆஜ்யபாத்ரத்தையும் அன்னம் முதலிய சருஹோம காலத்தில் சருபாத்ரத்தையும் அக்னி பரிஷேசன காலத்திலும் ஸந்தியா வந்தனத்திலும் மார்ஜந காலத்திலும் ஆசமனம் செய்யும் காலத்திலும் தீர்த்தத்தையும், போஜன காலத்திலும் சிராத்தத்திலும் போஜநபாத்ரத்தையும், இடது கையால் தொட்டுக்கொண்டிருக்கவேண்டும்.

(चत्वारिश्रृंगा–एषहिदेव: सप्तते अग्ने) சத்வாரி ஶ்ருங்கா ஏஷஹிதேவ: ஸப்ததே அக்நே முதலிய வேதமந்த்ரங்களால் அக்னி மூர்த்தியின் லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. அதையே ஸப்தஹஸ்த: முதலான ஶ்லோகங்களால் தியானம் செய்கிறோம். (இந்த தியானத்தை சிலர் செய்வதில்லை) அதாவது — 7 கைகள் உள்ளவரும் தலைகளில் 4 கொம்புகள் உள்ளவரும் 7 நாக்குகள் கொண்டவரும், 2 ஶிரஸ் உள்ளவரும், 3 பாதங்களுடையவரும், மலர்ந்த (தன்னைச் சரண்புகுந்த எல்லோரையும் ரக்ஷிக்கத்தக்க) முகத்துடன் விளங்குபவரும், 6 கண்களுடையவரும், நன்றாக உட்காந்திருப்பவரும், எப்போதும் புன்சிரிப்புடன் கூடியவரும், தன் வலது பாகத்தில் ஸ்வாஹா தேவியையும், இடது பாகத்தில் ஸ்வதா தேவியையும் அமைத்து வைத்திருப்பவரும், வலக்கைகள் நான்கிலும் ஶக்தி என்னும் ஆயுதம், அன்னம், (ஹவிஸ்) ஸ்ருவம், ஸ்ருக் என்று சொல்லப்படும் (ஹோமம் பண்ணுவதற்காக ஏற்பட்ட) மரப் பாத்ரங்களையும், இடது கைகள் மூன்றிலும் சில்லாக்கோல் என்று சொல்லக்கூடிய (பாம்பு—முதலிய விஷ ஜந்துக்களைப் பிடிக்க உபயோகிக்கும்) ஆயுதத்தையும், விசிறியையும், நெய் பாத்ரத்தையும், தரித்துக்கொண்டிருப்பவரும், செம்மறி ஆட்டின் மீது அமர்ந்தவரும், ஜடைதரித்தவரும், வெண்மை நிறத்துடன் பிரகாசிப்பவரும், மிகுந்த வலிமை பொருந்தியவரும், புகையைக் கொடியாகக் கொண்டவரும், சிவந்த கண்களை உடையவரும், ஏழு வித ஜ்வாலைகளால் பிரகாசிப்பவரும், எல்லா திக்குகளிலும் பார்க்கக்கூடிய முகங்களை உடையவரும், எல்லா அபீஷ்டங்களையும் நமக்கு கொடுக்க வல்லவரும், நம் எதிரில் மேற்கு முகமாக அமர்ந்திருப்பவரும், நம்மால் கொடுக்கப்பட்ட

---

ஹவிர்பாகத்தால் ப்ரீதியடைந்து நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவருமான அக்னி பகவானை தியானம் பண்ணுகிறேன் என்று அக்நியை த்யாநம் செய்ய வேண்டும்.

ஆகார ஸமித்துக்கள் வைக்குமிடம் அக்னியின் காதுகள். அங்கு ஹோமம் செய்தால் ரோகம் உண்டாகும். எங்கு புகைகின்றதோ அவ்விடம் மூக்கு ஆகும். அதில் ஹோமம் செய்தால் தனக்குறைவு. எவ்விடத்தில் ஸ்வல்ப ஜ்வாலையுள்ளதோ அது நேத்ரமாகும். அங்கு ஹோமம் செய்தால் நிந்தனையுண்டாகும். சாம்பலான இடம் ஶிரஸ். அவ்விடத்தில் ஹோமம் செய்தால் பாபம். சாம்பலான இடத்தின் ஓரம் கேஶமாகும். அங்கு ஹோமம் பண்ணினால் தாரித்ரயமும் யஜமானனுக்கேற்படும்.

இவற்றுள் சிலதை வேறு அங்கங்களாக சிலர் கொள்வர். நிறைய தணல் உள்ள அக்னியில் நடுவில் ஹோமம் செய்வதுதான் மிகவும் உத்தமம்.

ஸ்வாஹா என்னும் மந்த்ரத்தில் ஸகாரத்தில் ஹோமம் செய்தால் தோஷத்தையும், வகாரத்தில் செய்தால் சத்ருக்களின் வ்ருத்தியையும், ஹகாரத்தில் செய்தால் ஆயுஸ்ஸின் குறைவையும் கொடுக்கும். ஆதலால் கடைசியில் (ஹா) ஆ என்னும்போது ஹோமம் பண்ணுவதுதான் க்ஷேமகரமாகிறது.

ஹோமம் செய்யும் நெய் தாரையா உளுந்து அளவு பருமனுள்ளதாக இருக்கவேண்டும். உயரம் 16 விரக்கடை உத்தமம். 12 மத்யமம். 4 அதமபக்ஷம். இதற்குக் குறையக்கூடாது.

ஹோம முத்ரைகள் 3 விதம் (ம்ருகீ-ஹம்ஸீ ஸூகரீ) ம்ருகீ ஹம்ஸீ ஸூகரீ என்று. சுண்டு விரலையும் ஆள்காட்டிவிரலையும் பிரித்துவிட்டு மற்ற மூன்றையும் சேர்த்து மூடிக்கொள்வது ம்ருகீ முத்ரை எனப்படும். இதனால் யக்ஞத்தில் ஹோமம் செய்யவேண்டும். சுண்டு விரலை மட்டும் பிரித்துவிட்டு மற்றநான்கையும் சேர்த்து மூடிக்கொள்வது ஹம்ஸீ முத்ரை எனப்படும். இதனால் ஶாந்தி கர்மாவைச் செய்யவேண்டும். எல்லா விரல்களையும் சேர்த்து மூடிக்

கொள்வது ஸௌகரீ முத்ரையெனப்படும். இதனால் ஆபிசார க்ரியைகளைச் செய்யவேண்டியது. வேறு சிலருடைய அபிப்பிராயம் வருமாறு.

तिलाज्ययोर्मृगी मुद्रा हंसी च समिदाहुतौ।
वाराही चरुहोमे च होमेष्वेवं विधिः स्मृतः॥

எள்ளு நெய்ஹோமம் ம்ருகீ முத்ரையாலும் ஸமித் ஹோமம் ஹம்ஸீ முத்ரையாலும் சருஹோமம் வாராஹீ முத்ரையாலும் செய்யவேண்டும்.

அன்னஹோமத்துக்கு கட்டைவிரலின் மேல் கணு அளவு சருவை நகம்படாமல் கட்டைவிரல், பவித்ரவிரல் பாம்புவிரல் இம்மூன்றுகளாலும் எடுத்துக் கொள்ள வேண்டும். இம்மாதிரியாக இருமுறை எல்லா கோத்ரக் காரர்களுக்கும், ஸ்ரீவத்ஸ கோத்ரிகளுக்கு மாத்ரம் மூன்று முறையும் எடுத்துக் கொள்ளவேண்டியது. ஸ்விஷ்ட க்ருத்துக்காக எடுப்பது மற்றவர்களுக்கு ஒரு முறை. ஸ்ரீ வத்ஸர்களுக்கு இருமுறை. ஸ்விஷ்டக்கிருத்துக்காக எடுப் பது கொஞ்சம் அதிகமாக இருக்க வேண்டும்.

ஸமித்ஹோமகாலத்தில் அக்னி பகவான் நிற்பதா யும் அன்ன ஹோம காலத்தில் உட்கார்ந்திருப்பதாயும், ஆஜ்யஹோம காலத்தில் படுத்திருப்பதாயும் தியானித் துக்கொள்ளவும்.

பாரிஜாதத்தில் அக்னிக்குப் பல பெயர்கள் சொல்லி இருக்கிறது. (அவைகளின் விவரம் பிறகு பார்ப்போம்.)

அக்நிமுக ப்ரயோகம் என்பது பலவிதமாக மாறு பட்டிருக்கும். அவைகளைப்பற்றி முடிந்த வரையிலும் எழுதுகிறோம். மற்றவைகளை உபாத்யாயம் செய்து வைப்பவர் மூலம் அவ்வப்போது தெரிந்து கொள்ளு தல் நலம். இதில் சதுஷ்பாத்ரப்ரயோகம் என்பதில் இத்மம் ப்ரணீதி பிரும்மா ஆகாரஹோமம் ஸ்விஷ்டக்ருத் ஞயாதி ஆஜ்யபாகம் முகாஹுதி லேபகார்யம் பரிதி ப்ர ஹரணம் ஸம்ஸ்ராவ ஹோமம் ப்ரணீதா விமோகம் இவைகள் கிடையாது.

---

விவாஹமாகி ஸ்தாலீபாகமாகாதவர் அதை செய்க.

# சாந்தோக்ய உபநிஷத்.

## இரண்டாவது ப்ரபாடகம்.

இதுவரை ஸாமவேதத்தின் ஏகதேசமான ஓம் எனும் உத்கீத உபாஸனே கூறப்பட்டது. இனி பூர்ணமான ஸாமவேதத்தை ஐந்து விதமாகவும் ஏழுவிதமாகவும் உபாஸிக்கும்படி கூறுகிறது.

ஸாம என்ற சொல்லே ஸாது என்ற அர்த்தத்தையும் ஸமாதானம் என்ற அர்த்தத்தையும் வெளியிடும் சொல்லாம். அஸாம என்ருல் இதற்கு மாருன பொருளைத் தரும். ஆதலால் ஸாம என்ற சொல்லே ஸாதுஎன்று உபாஸிப்பவனே தர்மங்கள் தானே வந்து அடைந்து அவனுக்குப் பணிவிடை செய்யும்.

உலகத்தை ஐந்துவித ஸாமங்களாக உபாஸிக்க வேண்டும். ப்ருத்வீ ஹிங்காரமாகவும், அக்னி ப்ரஸ்தாவமாகவும், அந்தரிக்ஷம் உத்கீதமாகவும், ஸூரியன் ப்ரதிஹாரமாகவும், ஆகாஶம் நிதனமாகவும்; இப்படி மேல்நோக்கியுள்ள லோகங்களாக உபாஸிக்கவேண்டும். அப்படியே ஆகாசம் ஹிங்காரமென்றும் ஸூர்யன் ப்ரஸ்தாவமென்றும் அந்தரிக்ஷம் உத்கீதமென்றும் அக்னி ப்ரதிஹாரமென்றும் ப்ருத்வி நிதனமென்றும் இப்படி தலை கீழாகவும் உபாஸிக்கவேண்டும். இப்படி உபாஸிப்பவன் ஷ லோகங்களை ஜயிப்பான் (அடைவான்.)

மழையையும் ஐந்துவித ஸாமாவாக உபாஸித்தால் அவனது இஷ்டத்தை மழைபோல் வர்ஷிக்கும். மழையைக் கொண்டுவருகின்ற கீழ் காற்று ஹிங்காரமென்றும் மேகம் ப்ரஸ்தாவமென்றும் மழைக்கால் உத்கீதமென்றும் மின்னல், இடி ப்ரதிஹாரமென்றும் மழை பெய்து ஓய்வது நிதனம் என்றும் உபாஸிக்கவேண்டும்.

அதேபோல் ஜலத்தையும் ஐந்துவித ஸாமங்களாக உபாஸிக்கின்றவனுக்கு ஜலத்திற்கு தட்டிராது. மேகத்துள்ளிருக்கின்ற ஜலம் ஹிங்காரம். மழையால் விடுகிற ஜலம் ப்ரஸ்தாவம். நதிகளில் ஓடுகிற ஜலம் உத்கீதம். நதங்களின் ஜலம் ப்ரதிஹாரம். ஸமுத்ரஜலம் நிதனம் (மேற்கே உண்டாய் கிழக்கே ஸமுத்ரத்தில் ஸங்கமமாவது நதி. கிழக்கேதோன்றி மேற்கே ஸங்கமமாவது நதம்).

---

2 ஸ்தாலீபாகமாவது ஆகாவிடில் அக்னியே ஸித்திக்காது

ருதுக்களை அப்படி உபாஸிப்பவன் ருதுக்களால் உண்டாகும் பயனைப் பெறுவான். வஸந்த ருது ஹிங் காரம். க்ரீஷ்ம ருது ப்ரஸ்தாவம். வர்ஷாருது உத்கீதம். ஶரத்ருது ப்ரதிஹாரம் ஹேமந்த ருது நிதனம். யாக பசுக் களை ஐந்து ஸாமாக்களாக உபாஸிக்கின்றவன் யாகம் செய்த பலனைப் பெறுவான்.

வெள்ளாட்டை ஹிங்காரமென்றும் செம்மறியாட்டை ப்ரஸ்தாவமென்றும் பசுவை உத்கீதமென்றும் குதிரையை ப்ரதிஹாரமென்றும் நரனை நிதனமென்றும் உபாஸிக்க வேண்டும்.

ஐந்து ஞானேந்த்ரியங்களை ஒன்றுக்குமேல் ஒன்று சிறந்தது என்று ஐந்து ஸாமாக்களாக உபாஸிக்கின்ற வன் சிறந்த வாழ்வையும் உயர்ந்த லோகத்தையும் அடைவான்.

நாஸிகேந்த்ரியத்தை ஹிங்காரமென்றும், வாக்கை ப்ரஸ்தாவமென்றும். நேத்ரங்களை உத்கீதமென்றும், காதை ப்ரதிஹாரமென்றும், மனதை நிதானமென்றும் உபாஸிக்கவேண்டும்.

**இனி ஏழுவிதமான ஸாமோபாஸனை கூறப்படுகின்றது**

வாக்கை ஏழுவித ஸாமாக்களாக உபாஸிக்கிறவன் வாக்கினால் பெறத்தக்க ஸகலபாக்கியங்களையும் அன்னத் தையும் அதை உண்ணும் ஶக்தியையும் பெறுவான். ஹிங் காரத்தை ஹுங்காரமாகவும் ப்ரஸ்தாவத்தை ஸகல பர மான ஶப்த மென்றும் உத்கீதத்தின் முதல் அவயவமான ஓங்காரத்தை ஆஎன்கின்றஶப்தமாகவும் உத்கீதத்தை உத் என்ற ஶப்தமாகவும் ப்ரதிஹாரத்தை ப்ரதி என்ற ஶப்த மாகவும் உபத்ரவத்தை உப எனும் ஶப்தமாகவும் நிதனம் என்ற சப்தத்தை நீ என்ற ஶப்தமாகவும் உபாஸிக்க வேண்டும்.

சூர்யனை ஏழுவித ஸாமமாக உபாஸிக்கவேண்டும்.

எப்பொழுதும் எல்லோரிடமும் அவர் ஸமமாக விருப் பதால் ''ஸாம'' என்ற பெயர் அவருக்குப் பொருத்த மாகும். சூர்யோதயத்திற்கு முன் உள்ள உருவம் ஹிங் காரமெனப்படும். அவ்வேளையில் மிருகங்கள் எழுந்து ''ஹிங்'' என்று சப்திக்கின்றன. ஒவ்வொன்றும் அதன் வேலையில் ஈடுபடுகின்றது.

---

# அஷ்டாவக்ர கீதை.

நான் என்பது ஒழிந்தால் உடனே மோக்ஷம் வரும். நான் என்ற எண்ணம் உள்ளவரை பந்தம் அகலாது. இதை அறிந்து நான் என்பதை அடியோடு மறந்துவிடு. எனக்கென ஒன்றையும் ஏற்காதே.

[ஒரு குரு சிஷ்ய கோஷ்டிகளைப் பார்த்து உங்களில் வைகுண்டம் போகிறவன்—அதற்கேற்ற பரிபாகம் உள்ளவன்—யார்? என்றார். ஒருவரும் வாய் திறக்கவில்லை. வித்யா கர்வமில்லாத ஒருவன் எழுந்து நான் போனால் போகலாம் என்றான். வித்தை ஜாதி முதலியவைகளால் நான் நான் என்று எண்ணும் நீங்கள் போக முடியாது. நான் என்ற அஹங்காரம் போனால்தான் வைகுண்டம் போகலாமென அவன் கூறியதை குரு கூறினர் என ஒரு கதை இதை விளக்குகிறது.]

**9-ம் அத்யாயம்.** இதைச் செய் இதைச் செய்யாதே என்ற வேதம் கூறிய கர்மாவைச் செய்த யார் எப்போது ஸுக துக்கம் மான அவமானம் ஜநந மரணம் இவைகளை விட்டிருந்தார்? இதை நன்கு உணர்ந்து கர்மா முக்தி தராது, என வைராக்யம் கொண்டு கர்ம பலத்தை விட்டு முடிவில் கர்மாவையும் விட்டு ஸன்யாஸம் செய்துகொள். யாரோ ஒரு மஹா புருஷன்தான், உலகப் போக்கைக் கண்டு வைராக்யம் கொண்டு உலகில் வாழ வேண்டும், நன்றாக போக பாக்யங்களை அநுபவிக்க வேண்டும் என்ற ஆசை யற்றவனாக இருப்பான்.

போக பாக்யங்கள் எல்லாம் விரைவில் அழியக் கூடியவை. இருக்கும் வரையிலாவது பூர்ண ஸுகத்தைத் தருகிறதா? அதுவு மில்லை. தாப த்ரயங்களுடன் கூடி இருக்கின்றன. ஸாரமாவது உண்டா? மிகக் கேவல மானது! என உணர்ந்து போக பாக்யங்களில் ஆசை வைக்காதே.

காலத்தின் ஸ்வபாவத்தைக் கவனி. நாம் எவ்வளவு வயது இருப்போமென யோசனை செய். ஸுக துக்கம் சீதோஷ்ணம் மனிதனை பாதிக்காமலிருக்கிறதா கவனி? ஆதலால் நல்ல காலம் வரும், நீண்ட நாள் ஜீவிப்போம், துன்பங்களை விட்டு இன்பங்களையே அனுபவிப்போம்

---

பணமில்லாமல் இங்கு வாழமுடியாதென்பது ப்ரத்யக்ஷம்

என்றதை மறந்து கிடைத்ததைக் கொண்டு நடப்பதைக் கண்டு ஸித்தி பெறு.

உலகில் உண்டாவது போல் வேதாந்த நூல்களிலும் வைராக்யமுண்டாகவேண்டும். வேதாந்தம் கூறும் மஹர்ஷிகளில் எவ்வளவு மதபேதம் இருக்கின்றது! ஸித்தர்களில் யோகிகளில் எவ்வளவு பின்ன பின்ன கொள்கைகள் உள? இவைகளைக் கண்டு ஒருவருக்கு மநஶ்ஶாந்தி ஏற்பட வேண்டாமா? (பிரும்மம் உலகிற்கு உபாதாந காரணமா? நிமித்த காரணமா? உபய காரணமா? என வீண் வாதத்தை விடு. மநஶ்ஶாந்தி பெறு).

சுத்த சைதன்யமே மூர்த்தியுள்ள விஷ்ணு ஶிவன் என்று கல்பிக்கப்படுகிறது, என்பதை யுக்தியாலும் அநுபவத்தாலும் கூறி ஸம்ஸாரத்தி னின்று நம்மைத் தாண்டி வைப்பவர் உயர்ந்த குரு அல்லவா?

உலகில் காணப்படும் ஸமஸ்தமும் பஞ்சபூதங்களாலாகியவை. கவனித்தால் அவைகள் பஞ்சபூதங்களைத் தவிர வேறல்ல. இதை நன்ருக உணர்ந்தால் நான் பிரும்மமே என உணர்ந்து பிரும்மமாகி பந்தத்தில் அகப்படமாட்டாய். வாஸனையே ஸம்ஸாரம் என உணர்ந்து ஸகல வாஸனைகளையும் விட்டுவிடு. வாஸனையை விட்டால் ஸம்ஸாரத்தை விட்டதாகும். பின்னர் ஆத்ம ஸ்வரூபமே நிலையாகும். (அநாதி அவித்யா வாஸனையால் உண்டான இந்த ஸம்ஸார சக்ரத்தில் என ஸங்கல்பத்தில் இதைத் தான் கூறுகிரேம்).

**10-ம் அத்யாயம்.** நாம் மோக்ஷமடையாதபடி தடை செய்யும் சத்ரு காமந்தான். அர்த்தமோ அநர்த்தத்தைத் தருகிறது. நல்ல போகமும் தநமும் தர்மத்தினுல்தான் கிடைக்கின்றன. ஆதலால் தர்மம் அர்த்தம் காமம் என்ற மூன்றையும் ஆதரிக்காமல் மோக்ஷத்திலேயே ஆதரவு காட்டு.

மித்ரன் வீடு செல்வம் வயல் மனைவி தாயாதிகள் முதலிய ஸம்பத்துகளெல்லாம் நித்யமானவைகள் அல்ல. உடனே அழியும் ஒன்றை, நாலைந்து நாள் இருக்கும் படி காட்டுகின்ற இந்த்ரஜால வித்யைபோல் ஸ்திரமானதாகத் தோன்றும்.

---



# பால பாரதம்.

## பீஷ்ம பர்வா.

**கே:** பகவான் கிருஷ்ணர் பீஷ்மரை கொல்பவர் போல் ஓடினதும் மேலே என்ன நேர்ந்தது?

**ப:** பீஷ்மரும் தேரைவிட்டு இறங்கி வந்து அவர் கையால் அடிபட்டு இறக்க ஓடிவந்தார். இதனிடையில் அர்ஜுனன் ஓடிவந்து பகவான் திருவடியில் வீழ்ந்து அவரைத் திருப்பி அழைத்துச் சென்றான்.

**கே:** ஏன் அப்படிச் செய்தான்? பீஷ்மரைக் கொன்றால் அர்ஜுனனுக்கு நல்லதுதானே?

**ப:** நல்லதுதான், ஆயினும் ப்ரதிக்ஞையை மீறுவது பாபமல்லவா? பகவானது ப்ரதிக்ஞையுடன் அர்ஜுனனுடைய ப்ரதிக்ஞையும் வீணுவதாக இருந்தது. ஆதலால் அதை அவன் தடுத்தான்.

**கே:** அர்ஜுனன் ப்ரதிக்ஞை என்ன?

**ப:** பகவத்கீதையினிடையில் பகவான் "க்ருஷ்ண பக்தனுக்கு நாசமில்லை" யென அவனை ப்ரதிக்ஞை செய்யச் சொன்னார்.

**கே:** பகவானல்லவா அப்படி ப்ரதிக்ஞை செய்யவேண்டும்? அர்ஜுனனை ஏன் செய்யச்சொன்னார்?

**ப:** ராமாவதாரமானால் ஒரே சொல்! ஒரே அம்பு! ஒரே மனைவி! க்ருஷ்ணாவதாரத்தில் அவையெல்லாம் மாறும். தன் சொல்லை ரக்ஷிக்காவிடினும், தனது பக்தனுன அர்ஜுனன் சொல்லைக் கட்டாயம் காப்பாற்றவேண்டும் என்பதற்காக அப்படி ப்ரதிக்ஞை செய்யச்சொன்னார். அர்ஜுனனுக்காக பீஷ்மரைக் கொல்லாமல் விட்டார்.

**கே:** நான்காவது நாள் என்ன நேர்ந்தது?

**ப:** இரு ஸேனைகளிலும் வ்யூஹம்அமைத்து உக்ரமான யுத்தம் நடந்தது.

**கே:** வ்யூஹம் என்றால் என்ன?

---

**பரலோகத்திற்கு என்னசெய்கிறோம் எனக்கவனியுங்கள்**

ப: ஸேனையில் எதிரிகள் உள்ளே நுழையாதபடி தாமரை பூபோல் பத்மவ்யூஹம், ரதவ்யூஹம், ச்யேநவ்யூஹம் என பல வ்யூஹம் அமைப்பதாம்.

கே: மற்றவர் யுத்தம் செய்யவில்லையா ?

ப: பீஷ்மர் அர்ஜுனன் யுத்தம் செய்தது போல, ஸாத்யகி பூரிச்ரவஸ், த்ருஷ்டத்யும்னன், பீமஸேனன், கடோத்கஜன் ஆகியவர்களும் யுத்தம் செய்தார்கள். த்ருஷ்டத்யும்னன் ஸோமதத்தனது புத்ரனை சலன்யன் என்ற ராஜனைக்கொன்றான். பீமன் துர்யோதனனது தம்பிகளில் எட்டு பேரைக் கொன்றான். கடோத்கஜனது வீர்யத்தைக்கண்டு நடுங்கி கௌரவர் ஸேனை திரும்பிச்சென்றது.

கே: இந்த நான்குநாள் யுத்தத்தில் யாருக்கு அதிகநஷ்டம்?

ப: கௌரவ ஸேனைகள்தான் அதிகமாக மாண்டன. ஆதலால் பீஷ்மர், துர்யோதனனிடம், கிருஷ்ணனை அண்டிய பாண்டவருக்கு வெற்றி ஏற்பட்டது. இனியும் ஏற்படும். நீ உலகில் வாழவேண்டுமானால் பாண்டவருக்கு பாதி ராஜ்யம் கொடுத்து ஸமாதானம் செய்துகொள் என்றார்.

கே: ப்ரத்யக்ஷமாக அனுபவித்த பின்பாவது, துர்யோதனுக்கு நற்புத்தி வந்ததா ?

ப: எப்படி வரும்! மறுபடியும் வ்யூஹம் அமைத்துக் கொண்டு உக்ரமாக போர்புரிந்தார்கள். பூரிச்ரவஸ் என்ற கௌரவ வீரன் ஸாத்யகீ என்ற பாண்டவரைச் சார்ந்தவரின் பத்து புத்திரர்களைக் கொன்றான். அதனால் ஸாத்யகி என்பவருக்கும் பூரிச்ரவஸ் என்பவருக்கும் ஐந்தாவது நாள் கடும் போர் நிகழ்ந்தது.

கே: ஆறாவது நாள் என்ன நடந்தது ?

ப: க்ரௌஞ்ச மகர வ்யூஹமமைத்து யுத்தம் நடந்தது. ஸஞ்ஜயன் கூறியதைக் கேட்டு தன்ஸேனையில் பலர் இறந்ததைநாடி த்ருதராஷ்ட்ரன் வருந்தினான். ஆனால் பீஷ்மரும் த்ரோணரும் தங்கள் உடலைக் கவனிக்காமல் தீவ்ரமாக பாண்டவ ஸேனையைக் கொல்வதைக் கேட்டுக் களிப்புற்றான்.

---

ஸந்த்யை காயத்ரிகளை பொருள் உணர்ந்து நன்கு செய்க

கே : 7 வது நாள் என்ன நடந்தது ?

ப : முதல் நாள் இரவு துர்யோதனன் பீஷ்மரைப் பணிந்து தன் ஸேனை அழிவதைக் கூறி தனக்கு ஜயமுண்டாகும்படி அருள் புரிய வேண்டுமென வேண்டினன். அவர் சொன்னபடி அவன் கேட்கா விடினும் தான் உக்ரமாக போர் புரிவதாய் கூறி அவனை ஸந்தோஷப் படுத்தினர். அன்று துரோணர் விராடனின் புத்ரனை ஶங்கனைக் கொன்றார். இருவர் இருவராகச் சேர்ந்து தர்மராஜன் உள்பட பலர் பயங்கர யுத்தம் செய்தார்கள். பீமஸேநன் : ஸுநாபன் முதலிய எட்டு துர்யோதனின் ஸஹோதர்களைக் கொன்றான். அதேபோல் இராவானென்ற அர்ஜுநபுத்ரன் சகுனியின் ஸஹோதரர்களைக் கொன்றான். ஆர்ஷ்ய ச்ருங்கன் என்ற இராக்ஷஸன் இராவானைக் கொன்றான்.

கே : இராவான் என்ற அர்ஜுநபுத்ரன் எந்த பத்னியிடம் பிறந்தவன் ?

ப : உலூபீ என்ற நாக கன்னிகையிடம் பிறந்தவன். துர்யோதனனும் கடோத்கஜனும் மிகபயங்கரமாக யுத்தம் செய்தனர். நரகாஸுரனது புத்ரனை பகதத்தன் துர்யோதநனுடன் சேர்ந்து பல திவ்யாஸ்த்ரங்களைக் கொண்டு பாண்டவர்களைத் தாக்கினன். பீமஸேனன் துர்யோதனனது ஸஹோதரர்களில் மற்றும் பலரைக் கொன்றான்.

கே : பீமஸேனன் துர்யோதனுடைய ஸஹோதரர்களில் இது வரை பலரைக் கொன்றான் அல்லவா?

ப : துர்யோதனன் உள்பட 100 பேரையும் கொல்வதாக அவன் ப்ரதிக்ஞை செய்தான் அல்லவா ? துர்யோதனன் இரவில் பீஷ்மரிடம்சென்று தாங்கள் போரிலிருந்து விலகினால் கர்ணன் பாண்டவர்களைக் கொல்லுவதாக சொல்கிறான், என உறைத்தான்.

கே : பீஷ்மர் என்ன சொன்னர் ?

ப : கர்ணனாலும் மற்ற எவராலும் அர்ஜுனனைக் கொல்ல முடியாது எனக்கூறி சிகண்டியைத் தவிர மற்ற பாஞ்சாலரைத் தான் கொல்வதாகச் சொன்

ஞர். அலம்புஸன் என்பவன் இளம் பாண்டவர்களைத் தாக்கும் பொழுது அபிமன்யு அலம்புஸனைத் தோல்வியடையும்படிச் செய்தான். தர்மர் பீமன் அர்ஜுனன் மூவரும் போரில் புகுந்து பயங்கரமாக யுத்தம் செய்தனர். அந்த ஒன்பதாம் நாள் மாலையில் பீஷ்மருடைய உக்ரமான போரைக்கண்டு கிருஷ்ணன் கோபம் கொண்டு முன்போல் அவரைக் கொல்ல ஓடினார்.

**கே:** அப்பொழுதும் அர்ஜுனன் ஓடிவந்து கிருஷ்ணனை அழைத்துக்கொண்டிருப்பான் அல்லவா?

**ப:** ஆம்! அன்றிரவு கிருஷ்ணன் தர்மருடன் கூட ரஹஸ்யமாகப் பீஷ்மரிடம் சென்று பாண்டவர் ஜயத்திற்கு வழி யென்ன? வென்று கேட்டார். தனது எதிரில் சிகண்டி வந்தால் தான் யுத்தத்திலிருந்து ஒய்வதாகக் கூறினர்.

**கே:** அது பத்தாவது தினம் யுத்தமல்லவா?

**ப:** ஆம்! துர்யோதனது பிரார்த்தனைக் கிணங்கி பீஷ்மர் பாண்டவ ஸேனையைக் கொன்று குவித்தார். அர்ஜுனனும் உக்ரமாகப் போர் புரிய பீஷ்மருக்கு ஸஹாயமாக துச்சாஸனன் வர அவனையும் தோற்கடித்தான். அன்று பீமார்ஜுனர்கள் வீர்யத்தையும் போரில் தோன்றிய அப சகுனங்களையும் கண்டு த்ரோணர் அச்வத்தாமாவை ஜாக்ரதையாக இருக்கும்படி எச்சரித்தார்.

**கே:** மேலே என்ன நடந்தது?

**ப:** பகவான் சிகண்டியை பீஷ்மர் எதிரிலே கொண்டு நிறுத்த பீஷ்மர் வில்லை எறிந்து விட்டுத் தன்னை அடித்து வெற்றி பெறலாமென்றுக் கூறினர்.

**கே:** யார் அவரை அடித்தது?

**ப:** வேறு எவரால் முடியும்? அர்ஜுனனே அவரை அடித்து வீழ்த்தினன். அவர் பூமியில் விழுந்தவுடன் ஸகல வீரர்களும் அவரைப் பணிந்துப் போற்றினர்கள். அர்ஜுனன் பாணத்தினல் ஓர் படுக்கைத் தயார் செய்தான் அவருக்கு.

---

# உபமன்யு பக்த விலாஸம்.

## 7. வீரோத்பட —(விரண்மீண்டநாயனுர்.)

கேரள தேசத்திலே செங்குன்றூர் என்ற கிராமத்தில் வேளாளர் வம்சத்திலே வீரோத்படன் என்ரோர் சிவபக்தரிருந்தார். ஒப்பற்ற சிவபக்தரான அவர் சிவபக்தர்களிடமும் பேரன்பு பூண்டவர். ஒவ்வொரு சிவ க்ஷேத்திரமாகச் சென்று திருவாரூருக்கும் வந்தார், அங்கு வீதிவழியாக வரும்போது எண்ணிறந்த சிவ பக்தர் விபூதி ருத்ராக்ஷதாரிகளாகச் செல்வதைக்கண்டு மெய் மறந்து அவர்களை வணங்கிப் போற்றினுர்.

அங்கு சுந்தரமூர்த்தி தன் மனையாளுடன் அவ்வழியாக ஆடை ஆபரணம் பூண்டு படாடோபமாகச் சென்ருர். அடியார்களைச் சிறிதுமவர் மதிக்கவில்லை. கோபங்கொண்ட வீரோத்படர் சுந்தரர் பெருமையை அறிந்திருந்தும், அடியாரை மதிக்காத இவனும் பக்தனே? இவனுக்கு அருள் புரியும் திருவாரூராரும் சிவனே? இவனைக் கொல்கிறேன்! என்று ஆயுதந்தாங்கிஅணுக அவர் பயந்து ஆலயத்தில் புகுந்து தாளிட்டு சிவனை வேண்டினுர். நீ செய்த தவறு அகல அடியார்களைப் பாடென்று பகவான் கூற அவரும் பாடினுர். அனைவரும் வீரோத்படரைத் துதித்தனர். (பக்தர் பெருமை பரமனிலும் பெரிது.)

## 8. அமர்நீதி நாயனுர்.—(அமரநீதி)

சோழநாட்டிலே புராண ஸரித்-பழையாறை என்ற ஊரில் அமரநீதி என்ற வைச்யர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த சிவ பக்தர். சிவனடியார்களுக்கு உணவு உடை, கோவணம் முதலியன அளித்து ஆதரிப்பார். ஒருநாள் திருநல்லூர் உத்ஸவ தர்சனத்திற்குச் சென்று அங்கும் தன் தொண்டை நடத்தினுர். இதனுல் ஸந்தோஷமடைந்த பகவான் ஒரு சிவனடியாராகத் தோன்றி அமரநீதிக்கு தர்சனம் தந்தார். அடியார் ஒரு கோவணத்தை அவரிடம் அளித்து ஜாக்ரதையாக வைத்துத் தா இதை. யான் நீராடி வருகிறேன் என்று கூறிச் சென்ருர். அமரநீதி ஜாக்ரதையாக வைத்த கோவணத்தை மறைத்து விட்டார். நல்லமழை! ஆடை

எல்லாம் ஈறம்! உடல் நடுக்குகிறது! கொண்டுவா கோவணத்தை என்றார் அவர். தேடித்தேடியும் அது அகப்படாமல் போகவே அதற்கு ஈடாக அரிய புதிய கோவணம் தந்தார். இது எனக்கு வேண்டாம், அதே தான் வேண்டும். அல்லது அதற்கு ஸம இடையான கோவணம் தா என்றார். அமரநீதி அங்ஙனமே தராசில் பற்பல கோவணங்களை வைத்தார். அவை அதற்கு ஸமமாகவில்லை. மேலே நின்றன. அடியார் உத்தரவு பெற்று பொன்னையும் பொருளையும் வைத்தார். ஒன்றும் அந்த இடைக்குசமமாக வில்லை. விபூதி ருத்ராக்ஷங்களுக்கு அளவற்ற மகிமை உண்டென்பது ஸத்யமானால் இடை ஸமமாகட்டும் எனக்கூறி பஞ்சாக்ஷரத்தை உச்சரித்து விபூதி அணிந்து மனைவி மகனுடன் தராசில் தானும் ஏறினர், அடியார் கோவணத் தட்டு மேலே சென்றது. அவரது பக்தியும் கீர்த்தியும் உலகெலாம் பரவிற்று. கைலையில் அவரைத் தன் அருகே அமர்த்திக் கொண்டார் பகவான்.

**(அடியார்பணி மேன்மைக்கு அடி.)**

## 9. எறிபத்த நாயனர்.—(வீர பக்தர்)

சோழநாட்டில் கரூரில் அர்ச்சகர் வம்சத்தில் உதித்தவர் இவர். பக்தர்களுக்கு வரும் துன்பங்களை அகற்றி உதவுவது இவர் கை கொண்ட தெய்வப் பணி. ஒருநாள் சிவகாமி ஆண்டார் எனும் சிவபக்தர் வழக்கப்படி மலர் பரித்து கோவிலுக்குச் சென்றார். அவ்வூர் பட்டத்து யானை மதம்பிடித்து ஆண்டாரிடம் உள்ள பூங்குடலையை துதிக்கையால் இழுத்து புஷ்பத்தைக் கவிழ்த்துச்சென்றது. ஆண்டார் சினங்கொண்டு அதை சிக்ஷிக்க ஓடினர். வயதானதால் வழியில் களைத்து விழுந்தார். இதை அறிந்த எறிபத்த நாயனர் கோபங்கொண்டு கோடாலியால் யானையையும் பாகனையும் அவர்களுக்குப் பரிந்து வந்த வீரர்களையும் கொன்று குவித்தார். இதைக்கேட்ட அரசன் யாரோ பகைவன் என சதுரங்க சேனையுடன் அங்குவந்தார். நாயனரைக் கண்டவுடன் கோபமகன்று காரணம் விசாரித்து துஷ்ட யானை என்னுடையதே ஆதலால் என்னையும் கொல்லுங்கள் அல்லது நானே என் கழுத்தை வெட்டிக் கொள்ளட்டுமா என்றார் மன்னன்.

---

நாயனுர் அக்கத்தியைத் தான் வாங்கிக்கொண்டு இவ்வளவு சிறந்த பக்தரது யானையைக் கொன்ற நான் மாள்கிறேன் என்று தன் கழுத்தைவெட்டிக் கொள்ள முயற்சித்தார். அரசன் அதைத் தடுக்க, எறிபத்தர் சிவ பக்தியைவிளக்க இது நாம் செய்த கார்யமே என ஆகாயத்தில் ஒரு த்வனி தோன்றிற்று. கூடையில் புஷ்பம் நிறைந்தது. இறந்தவர் எழுந்தனர். எறிபத்தர் கைலே சென்ருர்.

**(அடியார்தீங்கை நீக்குவது ஒரு பக்தி.)**

## 10. ஏனுதிநாயனுர். —(ஏனுதிநாதர்)

சோழநாட்டிலே எயினனூரிலே விருஷ்ணி வம்ஸத்தில் ஏநாதிநாதர் என்ெருருவர் இருந்தார். அவர் அரசர்களுக்கு வாள் கற்பிப்பவர். தனது வருவாயெல்லாம் சிவனடியாருக்குச் செலவழிப்பார். விபூதி அணிந்தவரை தெய்வமாக நினைப்பார். இதே தொழிலிலுள்ள அதிஸூரன் என்பான் இவரைச் சண்டைக்கழைத்தான். இதில் தோல்வி பெற்ற அதிஸூரன் ஏகாந்தமாக இருவர் மாத்ரம் வாள் போர் புரிவதென அழைத்தான். ஏநாதி அதற்கிசைந்து யுத்தம் செய்யும்போது என்றும் விபூதி அணியாத பகைவன் அவரை வஞ்சிக்க நெற்றியில் விபூதியணிந்து வந்தான். நெற்றியில் திருநீரைக் கண்டவுடன் வாளை எறிந்து, பக்தனைக் கொல்லக்கருதிய எனக்கு அவர் கையால் இறப்பதே பிராயஸ்சித்தமென நின்ருர். வஞ்சகனை ஸூரன் அவரை வெட்டி வீழ்த்தினன். உடனே சிவன் ஏநாதியை கைலாஸத்திற்கழைத்துச் சென்ருர்.

**(விபூதியின் பெருமையை சிவனே அறிவர்.)**

## 11. (நேத்ரார்பகர்) — கண்ணப்பர்.

பொத்தப்பி நாட்டிலே உடும்பூரிலே நாகன் எனும் வேடராஜன் ஒருவனிருந்தான். தத்தா எனும் மனைவியுடன் ஜாதிக்கேற்ற தொழில் புரிந்து வந்தான். அவர்களுக்கு அபார வயதாகியும் புத்திர பாக்யமில்லாதிருந்தது. வேடர் குல தெய்வமான முருகனைப் பூஜித்தார்கள். அவரருளால் திண்ணன் என்ருேர் குழந்தை பிறந்தது. பெற்ருேரின் பேரானந்தம் அள

---

**ஒழிந்த வேளையில் ராமாயண பாரதாதிகளைப் படி.**

விட முடியுமா? அவனுக்கு வயது பதினாறுனது. குல தர்மப்படி வேட்டையிலும் வில்லிலும் தேர்ச்சி பெற்ருன். ஒரு நாள் வேட்டையாட வநஞ்சென்ருன். காளஹஸ்தி மலையில் ஒரு சிவலிங்கம் அவன் கண்ணில் பட்டது. பூர்வ புண்ணியத்தால் அதனிடம் அளவிலா அன்புகொண்டான். அவன் அதைக் கல்லாகக் கருதவில்லை. அவர் தனியே இருக்கின்ருரே! யார் உணவளிப்பர்? என வருந்தினான். தான் ஆங்காங்கு அலைந்து நல்ல மாம்ஸமாகத் தேடி பகவானுக்கு அளித்தான். வாயில் நல்ல நீரை எடுத்துவந்து லிங்கத்திற்கு அபிஷேகம் செய்தான். புஷ்பங்களை ஒரு காத்தால் எடுத்து வந்து, பழைய புஷ்பங்களைத் தனது செறுப்பு அணிந்த காலா லகற்றி லிங்கத்தின் ஶிரஸில் சாத்தினான். இங்ஙனம் நித்யம்பூஜைசெய்து வந்தான். (**மார்க்கா வர்தித என்ற சிவாநந்த லஹரியில் ஆதி சங்கரர் கூறினார் இதை**).

சிவகோசரர் என்ற முனிவர் இந்த மாம்ஸத் துண்டுகளைக்கண்டு வருத்தத்துடன் அவைகளை அகற்றி ஸம்ப்ரோக்ஷணம் செய்து தான் பூஜையைச் செய்தார். ஆனால் சிவலிங்கத்தை இப்படி அமூர்த்தம் செய்பவன் யார்? என வருந்தினார். பகவான் அவரது ஸ்வப்நத்தில் தோன்றி, எனது பக்தனை வேடன் அன்புடன் செய்யும் பூஜை. அதை நான் ஆநந்தத்துடன் ஏற்கிறேன். நாளை காலை நீ மறைந்திருந்து பார் அவன் பக்தியை என்றார்.

அதேபோல் மாம்ஸாதிகளுடன் வேடன் வர பகவானது ஒரு கண் நீர் வடிந்து நோய்வாய்பட்டிருக்கக் கண்டான். ஐயோ! இவரது துன்பத்தை எப்படியகற்றுவேன்? எனக்கதறி பாணத்தால் தனது கண்ணில் ஒன்றைத் தோண்டி லிங்கத்தின் கண்ணில் வைத்தான். மற்றொரு கண்ணும் நோய்வாய்பட இரண்டாவது கண்ணையும் அளிக்கத் தீர்மானித்தான். ஆனால் எங்கே அதை வைப்பது? என தெரியாமல் போகுமே என. தன் காலை அந்த இடத்தில் அடையாளம் வைத்துக் கொண்டு தன் இரண்டாவது கண்ணை தோண்ட முயற்சித்தான்.

பகவான் விருஷபாரூடராக வந்து அவன் கையைப் பிடித்துக் கொண்டு கண்ணப்பா! என அழைத்து கைலாஸ மழைத்துச் சென்ருர். (**பக்திக்கு ஜாதிபேதமில்லை.**)

---

**ஆசார்ய உபதேசங்களை அடிக்கடி படி. மநநம் செய்க.**

# ஸ்வர்க்க வாஸம்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

கிருத யுகத்தில் கீர்த்தி வாய்ந்த பேரரசர்களுள் யயாதியும் ஒருவன். இவனுடைய சரித்திரம் மிகவும் பவித்திரமானது. நகுஷ சக்கரவர்த்தியின் புதல்வன் இவன். இளமை அளித்து முதுமையை ஏற்ற பூருவின் தந்தை இவன்.

ஒரு சமயம் புண்ணியங்கள் பல செய்து, தேவ லோகத்தில் வீற்றிருந்த யயாதி அங்குற்ற தேவேந்திர னோடு அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தான். தேவேந் திரனும் யயாதி பூமியில் அரசாண்ட சிறப்பை எல்லாம் ஆவலுடன் கேட்டவண்ணம் இருந்தான். தேவேந்திர னின் புகழ் மொழிகளில் மயக்கம் கொண்ட யயாதி பல பேச்சுக் கிடையே, தற்பெருமை தலை எடுக்கத் தன்னைப் போல் இவ்வுலகில் புண்ணியங்கள் செய்தவன் எவனும் இருந்ததில்லை என்று சொல்லிவிட்டான். இந்த யயாதி யின் சொல்லில் குற்றம் ஏற்பட்டதுடன், அதற்கு ஒரு வேகமும் இருந்தது. தற்பெருமை பேசுகிறவனிடம் இயல் பாகவே பிறரை அவமதிக்கும் குற்றம் ஏற்படுவதால், யயாதி இனி தேவலோகத்தில் தரித்திருக்க முடியாத நிலையை அடைந்தான். புண்ணியம் ஒருவனிடம் பூர்த்தி யாக இருக்கிறவரைதான் புண்ணிய லோக வாழ்வு. சிறிது குறைந்தாலும் விழவேண்டியவனே. யயாதி அவ்வாறே பூமியை நோக்கி விழ ஆரம்பித்தான். தன் வாய்ப் பேச்சே தனக்குப் பெரும் தீங்கை விளைவித்ததை எண்ணித் துயரடைந்து தேவராஜனிடம் வரம் வேண்டி னான். 'ஐயனே, மறுபடியும் இந்த நிலை வந்துசேர வழி சொல்லும்' என்று இறைஞ்சினான். தேவபதியும் 'அரசே! கவலை வேண்டாம். நீ இப்பொழுது மஹான் களும், ஸாதுக்களும் தங்குமிடத்திலே விழப்போகிறாய். அவர்களுடைய புண்ணியமும் கருணையும் உன்னை

---

நிச்சயம் காப்பாற்றும்!' என்று ஆறுதல் கூறி, " இனி யாரையும் இகழ்ந்தோ அவமதித்தோ பேசலாகாது. உனக்கு நிகரானவர்களிடத்திலும், தாழ்ந்தவர்களிடத்திலும் கூட அவமதிப்பு ஏற்படலாகாது. உன்னைவிட மேம்பட்டவர்கள் எங்கும் இருக்கிறார்கள் என்ற புத்தி எப்பொழுதும் உன்னைவிட்டு நீங்கலாகாது" என்று புத்திமதியும் அளித்தான்.

பிறகு யயாதி, விழ ஆரம்பித்தான். மற்றொரு சூரியன் போல ஒளிமிகுந்து பூமியை நோக்கி விரைந்து வருகிற யயாதியை பூமியில் அஷ்டகன் என்ற ராஜரிஷி கண்டான். இவன் யயாதியின் பெண் வயிற்றுப்பிள்ளை. தன் மாதாமஹர் இவர் என்று அறியாமல், யாரோ ஒரு தேவ புருஷன், இவர் புண்ணியம் குறைந்து பூமியில் விழுகிறார் என்று இரக்கமும் பக்தியும் கொண்டு " ஐயா! நீர் யார்? உன்னத நிலை தவறி விட்டதா? என்ன காரணமோ? யாரை நோக்கி இங்கு வருகிறீர்? யாரையும் நீர் லக்ஷ்யம் செய்வதாகத் தெரியவில்லையே. உம்முடைய தேஜஸ்ஸையும், ரூபத்தையும் கண்டு நாங்கள் வியப்படைகிறோம். ஸாதுக்களுக்கு எப்போதும் ஸாதுக்களே கதி. நீரும் ஸாதுக்கள் இருப்பிடம் நோக்கி விரைந்து வருகிறீர். அனைத்தையும் விவரமாகத் தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டான்.

**யயாதி:** நான் நகுஷ சக்கரவர்த்தியின் புதல்வன். யயாதி என்று பெயர்கொண்டு வாழ்ந்தவன். உயர்ந்த உங்கள் பூருவின் தகப்பன் நானே. புண்ணியம்செய்து விண்ணகரம் அடைந்தேன். அங்கு புண்ணியத்தின் செருக்கால் அகந்தைகொளப் பேசிவிட்டேன். புண்ணியம் பிசகிவிட்டது. அதன் பயனாகப் பூமியில் தள்ளப்பட்டு விழுகிறேன். இங்கு ஸாதுக்கள் ஆச்ரமமுண்டா? அவர்களால் பிழைத்து மறுபடி ஸ்வர்க்கம்போக விரும்புகிறேன்.

---

*கூடுமானவரை ஸினிமா ட்ராமா ஹோட்டல் செல்லாதே.*

அஷ்டகன்: அப்படி எனில், நீர் ஏன் வணக்கம் ஏதும் இல்லாமல் அலக்ஷ்யமாக வருகிறீர் ?

யயாதி: வணங்குவதற்குத் தவம், வித்தை, வயது இவைகளில் மூத்தவனே உரியவன். நானே உங்களுக்கு வயதில் மூத்தவன். அதனால் உங்களை வணங்கவில்லை.

அஷ்டகன்: வித்தை, தவம், வயது இவைகளில் முதல் இரண்டுமே ஒருவனைப் பெரியவனாக்கும். வயது முக்கியமாகுமா த்விஜர்களுக்கு ?

யயாதி: வித்தையும் தவமும் பெற்றதனால் மாத் திரம் ஒருவன் பெரியவனாகுவதில்லை. வித்தையால் விவேகமும், தவத்தால் தெளிவும் பெற்றவனே பெரிய வன். ஸுகமும் துக்கமும் நிலையில்லாதது என்ற நினை வுடன், தான் தன்னுடையது என்ற நினைவும் சிறிதும் சேராமல் விதித்தவன் விதிப்படி நடக்கட்டும் என்று ஸுகத்திலும் துக்கத்திலும் ஒரே நிலையுடன் கவலையற் றிருக்கும் ஞானியே எல்லோராலும் வணங்குவதற் குரி யவன். (தன்னுடைய கதியை நினைந்து யயாதி வருந்திப் பேசிய வார்த்தை இவை).

அஷ்டகன்: இவ்வளவு தத்துவம் அறிந்தவர் இந்த கதி அடைந்ததேனோ ?

யயாதி: என் புண்ணியம் குறைந்தது. விழுகிறேன்.

அஷ்டகன்: புண்ணியம் குறைவது எப்படி ? புண்ணியம் குறைந்தால் இப்படி விழுவதுதான் விதியா?

யயாதி: மரித்த ஒருவன், தன் புண்ணிய, பாப வினைப்பயன்களால் இழுக்கப்படுகிறான். அந்த ஜீவனைத் தாங்கின கூடான சரீரம் புதைக்கப்பட்டோ, எரிக்கப் பட்டோ மறைந்தாலும், அதில் தங்கியிருந்த ஞாபகத் தையும், அந்த சரீரத்துடன் தான் செய்த நல்வினை தீவினைகளின் வேகத்தை இந்த ஜீவன் மறைக்க முடிவ

---

எல்லோரும் கலக்கும் பங்க்தியில் சாப்பிடாதே.

தில்லை. அதனுல் அதன்படி இழுபட்டு, நல்லதும் தீயது மான பலபல பிறவிகளில் பூமியில் பிறக்கும்படி ஏற் படுகிறது.

நல்வினையற்றவன் இந்த பூமியிலே இழிபிறவிகளில் தோன்றித் துயரம் அடைகிருன். இதுவே இவனுக்கு இந்த பூமியில் நரகவாதனை. நல்ல பிறவியிலிருந்து தவறி விழுந்தவன் மறுபடி நற்கதி அடைவது மிகவும் கடினம். பாவங்களின் சேர்க்கை யற்றவன் தான், தேடிக் கொண்ட புண்ணிய வழியிலே விடாது நின்று ஸுகத்தை அனுபவிக்கிருன்.

நற்கருமங்களைச் செய்வது, அதாவது தவம் செய் திருப்பது, தன்னிடமுள்ள பொருளை (தனது என்ற அபிமானமின்றி) வாரிப் பிறர்க்கு வழங்குவது, புலன் அடக்கம், பணிவு, ஸத்ய நெறி, ஜீவ தயை இவை போன்றவை ஒருவனை உயர்த்தி விண்ணுலகம் சேர்க் கும். (அல்லது) விண்ணுலக இன்பத்தை அளிக்கும். அந்த இன்பம் அடைந்த பிறகும், இந்த சிறந்த இயல்பு களை விடாது பற்றி நிற்பதே விவேகியின் செயலாகும். தன்னை, மெத்தப் படித்தவன் என்றோ, தன் கருமங்களில் பெருமை பேசுவதோ இங்கும் கூடாது அங்கும் கூடாது. தன்னைப் புகழ்ந்தவனைப் புகழ்வதும், இகழ்ந்தவனை இகழ்வதும், இதற்காக இதை இப்படிச் செய்தேன் என்ற பிரசங்கமும், மனம் சென்றபடி கருவிகளைத் தூண்டிவிடுவதும் இங்கும் அங்கும் விடத்தக்கதே. இந்த நிலையில் இருப்பவர்களுக்கு இந்த உலகமே ஸ்வர்க்கமாகும். ஸ்வர்க்கமோ நித்தியமான மோக்ஷ ஹேதுவாகும்.

வேகமாக விழுகிற யயாதி, அஷ்டகன் தவவலிமை யால் ஆகாயத்தில் நின்றபடி பேசிக்கொண்டிருக்கிருன்.

(தொடரும்)

---

*கல்யாணங்களில் கூட சாப்பிடாம லிருப்பதே நலம்.*



# நவரஸம்.



"அக்ஷயபரணி"

## அன்ன விசாரம்!

பரம ஏழை ஒருவன் பெரும்பசியோடுகூட "அம்மா! ஒரு கபளம் அன்னம் இடுங்கள்" என்று ஒருவீட்டின் வாசலிலே போய் நின்றான். அவனுடைய பாக்யம் அன்று அந்த வீட்டில் ஒரு விருந்து நடந்துகொண்டிருக்கிறது. அவ்வில்லத்தின் தலைவி கருணையே உருவானவள். பரிவோடு யாசகனை உள்ளே அழைத்துச்சென்று பெரிய இலையொன்று போட்டு அறுசுவை உண்டியை அள்ளி அள்ளிப் பரிமாறினாள். ஆனந்தம் ஒருபுறம்! ஆச்சர்யம் ஒருபுறம்!! இப்படியாக போஜனத்திலே முனைந்து விட்டான் அந்த விருந்தாளி; அவன் உள்ளம் நிறைந்து, "தாயே! நீ வாழ்க! உன் அன்பு வாழ்க!!" என்று வாழ்த்த வேண்டுமென நினைக்கிறது. ஆனால் அவன் வாய் அதைக் கூறவில்லை; அது தான் உணவை உள்ளே தள்ளுவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறதே! வாய் சொல்ல மறந்ததை அவன் வயிறு சொல்லிவிட்டது! எப்படித் தெரியுமா? அடிக்கடி மேலே கிளம்பிய ஏப்பத்தின் மூலமாகத் "திருப்தி! திருப்தி!!" என்று கோஷமே செய்துவிட்டது நன்றியுள்ள அவன் வயிறு!

## ப்ரதி வசனம்!

வயிற்றுக்கு ஈயும் உணவைக் காட்டிலும் செவிக்களிக்கும் உணவு சிறந்தது அல்லவா! அதுவும் அந்த செவிக்குணவைப் படைப்பவள் உலகத்திற்கெல்லாம் அன்னையான பராசக்தியாயிருந்து விட்டால்? தேவி கொடுக்கும் அத்தகைய உணவை உட்கொள்ளுபவள் யார் தெரியுமா? சாக்ஷாத் ஸரஸ்வதி! மலைமகளும், கலைமகளும் மறுபடியும் சந்திப்பது, ஆதிசங்கரர் அருளிய ஸௌந்தர்ய லஹரியில் தான்!

सरस्वत्याः सूक्तीरमृतलहरीकौशलहरीः
पिबन्त्याः शर्वाणि श्रवणचुलुकाभ्यामविरलम् ।
चमत्कारश्लाघाचलित शिरसः कुण्डलगणो
झणत्कारैस्तारैः प्रतिवचनमाचष्ट इव ते ॥

---

பலருடன் உட்கார்ந்து புஜிக்க நேருகிறது.

ஸரஸ்வத்யா: ஸூக்திரம்ருதலஹரீகௌஶலஹரீ:
பிப[2]ந்த்யா: ஶர்வாணி ஶ்ரவண சுளுகாப்[4]யாம் அவிரளம் !
சமத்காரஶ்லாகா[4] சலித ஶிரஸ: குண்ட[3]லகணோ
ஜணத்காரைஸ் தாரை: ப்ரதி வசனமாசஷ்ட இவ தே ||

அன்னை அபூர்வமான விஷயங்களைச் சொல்லிக் கொண்டே போகிருள். அவை வெறும் பேச்சுக்களல்ல! அம்ருத வர்ஷம்! தனது காதுகளாகிற கைகளால் ஏந்தி ஏந்தி அருந்துகிருள் கலையரசி! மூச்சுவிட்டால் அந்த இடைவேளையில் ஏதாவது விஷயங்களை இழந்து விடுவோமோ என்ற பயம் அவளுக்கு! அம்பிகையின் வாக்கில் அபாரமான நுட்பங்கள், தோன்றிய வண்ணம் இருக்கின்றன. "ஆஹா! ஆஹா!!" என்று ஆமோதிக்க வேண்டிய அந்த சமத்காரங்கள் கேட்கப்படும் போது வாய் விட்டுப் பேசினுல் ரஸானுபவம் தடை படுமோ என்று அஞ்சி ஸரஸ்வதி தலையை மாத்திரம் அந்த சந்தர்ப்பங்களில் சிறிது ஆட்டுவாள்! அவளது தலையாடும்போது, காதிலே அணிந்திருக்கும் குண்டலங்கள் ஆடி "ஜண, ஜண" வென்று சப்திக்கும். அவள் வாய்விட்டுக் கூருத பாராட்டுதல்களை அவளது குண்டலங்கள் தனது சப்தத்தினுல் கூறி, அம்பிகையின் பேச்சுக்குப் பிரதி வசனம் அமைத்துக் கொடுத்ததாம்!

## ஹூங்காரம்!

ப்ரதி வசனத்தினுலே சொல்பவர்களுக்கு உற்சாகம் உண்டாகிறது! குழந்தைகள் விஷயத்திலே இதற்கு மற்ருெரு உபயோகமும் உண்டு. சிறு குழந்தைகளுக்குக் கதை சொல்கிருேமல்லவா! அவைகள் "உம்! உம்!" என்று சொல்லச் சொல்லத்தான் நாமும் கதையை மேற்கொண்டு சொல்லுவோம். அது நின்று விட்டால் குழந்தை தூங்கி விட்டது என்று நாமும் நிறுத்தி விடுவோம். ஆனுல் குழந்தை "உம்" என்று சொல்லியும் கூட ஒரு தாய் கதையைப் பாதியில் நிறுத்தி விட்டாளாம்!

அவள் யார் தெரியுமா? "ஏர் ஆர்ந்த கண்ணி" யாம் யசோதை! பச்சை ஆலிலையில் பள்ளி கொள்ளும் ஊழி முதல்வன் ஒன்றும் அறியாப் பாலகனுய் அவள்பக்கத்தில் படுத்திருக்கிருன். குழந்தை தூங்க வேண்டுமென ஒரு கதை ஆரம்பிக்கிருள்:—

---

''ராமோ நாம ப³பூ⁴வ''

''ராமன், ராமன் என்று ஒரு ராஜா இருந்தான்.'' பேதை அவள் தன் குழந்தையின் பூர்வ விருத்தாந்தங் களையே தான் கதையாகச் சொல்கிறோமென்று அறிய மாட்டாதவள்! கதை மேற்கொண்டு நடக்கிறது! பகவா னும் விடாமல் ''உம்! உம்!'' என்று பதில் சொல்லி வருகிறார்.

'சீதை என்பவளை மணந்தான்' —'உம்' 'அவனைத் தகப்பனார் காட்டிற்குப்போ என்றார்'–'உம்' 'அவ்வண் ணமே தம்பியுடனும், சீதையுடனும் கானகம் சென்றான்'- 'உம்' 'காட்டிலே ராவணன் என்ற கொடியவன் சீதையை அபஹரித்தான்' – இதற்குப் பதில் உம்! உம்! என்று பகவான் கூறவில்லை 'ஹூம்! ஹூம்!' என்று ஹூங்காரம் செய்து, ''ஸௌமித்ரே! க்வ தநுர் தநுர் தநுரிதி'' ''ஏ, லக்ஷ்மணா! வில் எங்கே? வில் எங்கே?'' என்று கர்ஜித்தாராம்!

கலக்கமடைந்த தாயார் கதையை நிறுத்திவிட்டாள்! குழந்தை பயப்படும்படியாக ஏன் கதை சொன்னேன் என்று தன்னைத் தான் நொந்துகொண்டாள் கபடமறியா யசோதை.

இந்த அழகிய காட்சியை நமக்குக்காண்பித்தவர் லீலா சுகர். கண்ணனின் பால லீலைகளில் லயித்து ப்ரும்மானந் தத்தை அடைந்த இவ்வுத்தமர் தனது கிருஷ்ணகர்ணாம்ருத மென்ற ஸ்தோத்திரத்தில் இத் தகைய கற்பனை ஒன்றை ஏன்செய்தார்? பகவான் எதற்காக ''வில் எங்கே'' என்று பதர வேண்டும்? வெறும் லீலையா? அல்லது நமக்கெல் லாம் பூர்வ ஜன்ம வாசனை என்று ஒன்று உண்டல்லவா? அதைப்போல் ப்ரக்ருதி சம்பந்தத்தை வலிய ஏற்றுக் கொண்டபகவானுக்கும் அப்படி ஒரு நினைவின் தொடர்பு உண்டென்று காட்டுவதற்கா? அல்லது ''விநாசாயச துஷ் க்ருதாம்'' என்று தீயவர்களைத் தீர்ப்பதில் ஆண்டவன் பால பருவத்திலும் விழிப்புடன்தான் உள்ளான் என் பதைத் தெரியப்படுத்தவா?

யார் கண்டார்கள்? அருள் பெற்றவர்களின் வாக்கு; அதன் கருத்தாழத்தைக் காணுவது அரிது! அரிது!!

---

# மாசி மாத விசேஷம்

**மக நக்ஷத்ரத்தில்** பௌர்ணமி வருவதால் மாகமாஸம் என்றும் ஸூர்யன் கும்ப ராசியில் புகுவதால் கும்ப மாஸமென்றும் பெயர். மாக புராணம் 30 அத்யாயம் ஸ்காந்தத்திலுளது. மாசி பங்குனி சித்திரை வையாசி ஆனி ஆக ஐந்து மாதங்கள் வஸந்த ருதுவைச் சார்ந்த தென்பர்.

**மாக கிருஷ்ணாஷ்டமீ:** ஸீதாதேவி அவதாரம் செய்த நாள். அன்று ஸீதாதேவி பூஜை செய்வதுவிசேஷம். மாக ஸ்நாநம் 30 நாட்களும் செய்து முடிவில் அன்னதாநம் கம்பளதாநம் செய்ய வேண்டும்.

**மகா சிவராத்ரி:** 18உ வியாழனன்று. (அதன் மஹிமை விரதம் செய்யும் வகை, பலன், கதை எல்லாம் சேர்ந்து 33 பைசாவுக்கு குருகுலத்தில் கிடைக்கும்.)

**மாக ஸ்நாந ஸங்கல்ப அர்க்யாதி:** சுக்லாம்—சாந்தயே. சுபே சோபநே முகூர்த்தே ஆத்ய ப்ரும்மண: த்விதியே பரார்தே ச்வேத வராஹ கல்பே வைவஸ்வத மன்வந்தரே கலௌயுகே ப்ரதமே பாதே ஜம்பூ த்வீபே பாரத வர்ஷே பரத கண்டே மேரோ: தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்தமாநே வ்யாவஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸ ராணாம் மத்யே விகாரி நாம ஸம்வத்ஸரே உத்தராயணே சிசிரரிதௌ கும்பமாஸே கிருஷ்ணபக்ஷே பிரதமாயாம் சுபதிதௌ மகநக்ஷத்ர யுக்தாயாம் ஸ்திரவாஸர யுக்தாயாம் ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் ப்ரதமாயாம் சுபதிதௌ ஸமஸ்த பாப க்ஷயார்த்தம் விஷ்ணு ப்ரீத்யர்த்தம் மாக ஸ்நாநம் அர்க்ய தாநஞ்ச கரிஷ்யே.

மாக மாஸே ரடந்த்யாப: கிஞ்சித ப்யுதிதேரவௌ।
பிரும்மக்நம் வா ஸுராபம் வாகம் பதந்தம் புநீமஹே ॥
துக்க தாரித்ர்ய நாசாய ஸ்ரீ விஷ்ணோஸ் தோஷ ணாயச ।
ப்ராத ஸ்நாநம் கரோம்யத்ய மாகே பாப விநாசநம் ॥
மகரஸ்தே ரவௌ மாகே கோவிந்தாச்யுத மாதவ ।
ஸ்நாநேந அநேமே தேவயதோக்த பல தோபவ ॥

**அர்க்ய மந்த்ரம்.**

ஸவித்ரே ப்ரஸ வித்ரேச பரந்தாம ஜலேமம ।
த்வத்தேஜஸா பரி ப்ரஷ்டம் பாபம் யாது ஸஹஸ்ரதா ॥

ஸவித்ரே நம: இதமர்க்யம் மூன்று முறை. கங்கா யமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ । த்ரை லோக்ய வந்திதே தேவி இதமர்க்யம் ததாமிதே ॥ த்ரிவேண்யை நம: இதமர்க்யம் மூன்று முறை.

ப்ரார்த்தனே: ப்ரபாகர ஜகன்நாத திவாகர நமோஸ்துதே ।
பரிபூர்ணம் குருஷ்வேதம் மாக ஸ்நாநம் மயாக்ருதம் ॥

## ஸ்ரீ துலா காவேரி புராணம்.

நமது பத்ரிகையில் வரும் ஸ்ரீ கல்கி புராணம் முடிந்தும், ஸ்ரீ துலா காவேரி புராணம் தொடர்ந்து வரும்.

## ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்.

1. कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते ।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम् ॥

கௌஸல்யா ஸுப்ரஜா ராமபூர்வாஸந்த்யாப்ரவர்த்ததே ।
உத்திஷ்டநர ஶார்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் ॥

**कौसल्या सुप्रजा:** கௌஸல்யாஸுப்ரஜா:-கௌசல்யையின் நற்புத்ர! **राम** ராம-எல்லோரையும்ரமிக்கும்படிசெய்பவனே **नरशार्दूल** நரஶார்தூல-மனிதரில்சிறந்தவனே **पूर्वासन्ध्या प्रवर्तते** பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே-காலைப்பொழுது புலருகிறது. **दैवम्** தைவம்-தேவர்களைநாடிச் செய்யவேண்டிய, **आह्निकम्** ஆஹ்நிகம்-நித்யகர்மா **कर्तव्यम्** கர்தவ்யம்-செய்யவேண்டும் **उत्तिष्ठ** உத்திஷ்ட-எழுவீராக.

(ராமரும் வெங்கடாசலபதியும் ஒருவரே.)

2. उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द उत्तिष्ठ गरुडध्वज ।
उत्तिष्ठ कमलाकान्त त्रैलोक्यं मङ्गलं कुरु ॥

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ ।
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம்குரு ॥

**गोविन्द** கோவிந்த-பசுக்களைக்காப்பவனே **उत्तिष्ठ** உத்திஷ்ட-எழுந்தருள் **उत्तिष्ठ** உத்திஷ்ட-எழுந்தருள் **गरुडध्वज** கருடத்வஜ-கருடனைக்கொடியிலுடையவனே **उत्तिष्ठ** உத்திஷ்ட-எழுந்தருள் **कमलाकान्त** கமலாகாந்த-லக்ஷ்மீ பதியே **उत्तिष्ठ** உத்திஷ்ட-எழுந்தருள் **त्रैलोक्यं** த்ரைலோக்யம்-மூவ்வுலகையும் **मङ्गलम्** மங்களம்-சுபமுள்ளதாக **कुरु** குரு-செய்.

3. मातस्समस्त जगतां मधुकैटभारेः
वक्षो विहारिणि मनोहर दिव्यमूर्ते ।
श्री स्वामिनि श्रितजनप्रियदानशीले
श्रीवेङ्कटेशदयिते तव सुप्रभातम् ॥

---

மாதஸ்ஸமஸ்த ஜகதாம் மதுகைடபாரே:
வக்ஷோவிஹாரிணி மனோஹர திவ்யமூர்தே ॥
ஸ்ரீஸ்வாமினி ஶ்ரிதஜனப்ரியதாநஶீலே
ஸ்ரீவேங்கடேஶதயிதே தவஸுப்ரபாதம் ॥

**समस्तजगतां** ஸமஸ்தஜகதாம்-எல்லா உலகங்களுக்கும் **मातः** மாத:-அன்னையே **मधुकैटभारेः** மதுகைடபாரே:-மது கைடபர்களின் பகைவரான விஷ்ணுவினுடைய **वक्षोविहारीणि** வக்ஷோவிஹாரிணி-மார்பில் விளையாடுபவளே **मनोहर दिव्यमूर्ते** மனோஹர திவ்யமூர்தே-உள்ளத்தைக்கவரும் உயர்ந்த சரீரமுடையவளே **श्रितजन प्रियदानशीले** ஶ்ரிதஜனப்ரிய தானஶீலே-அண்டியவர்களின் விருப்பங்களை அளிப்பவளே **श्रीवेङ्कटेशदयिते** ஸ்ரீவேங்கடேஶதயிதே-திருவேங்கடனுடைய அன்பிற் குரியவளே **श्रीस्वामिनि** ஸ்ரீஸ்வாமினி-பிராட்டியே **तव** தவ உமக்கு **सुप्रभातम्** ஸுப்ரபாதம்-நற் பொழுது புலருக.

4. **तवसुप्रभातमरविन्दलोचने भवतुप्रसन्नमुखचन्द्रमण्डले ।**
**विधिशङ्करेन्द्रवनिताभिरर्चिते वृषशैलनाथ दयिते दयानिधे ॥**

தவஸுப்ரபாத மரவிந்தலோசனே பவதுப்ரஸன்ன முகசந்த்ர மண்டலே । விதிஶங்கரேந்த்ரவநிதாபிரர்சிதே வ்ருஷஶைலநாத தயிதே தயாநிதே ॥

**अरविन्दलोचने** அரவிந்தலோசனே-கமலக்கண்ணியே **प्रसन्नमुखचन्द्रमण्डले** ப்ரஸன்ன முகசந்த்ர மண்டலே-ப்ரஸன்னமானமுகசந்த்ரனுடையவளே **विधिशङ्करेन्द्रवनिताभिः** விதிஶங்கரேந்த்ர வநிதாபி:-ப்ரும்மா சிவன் இந்திரன் இவர்களுடைய மனைவிகளால் **अर्चिते** அர்ச்சிதே-பூஜிக்கப்பட்டவளே **दयानिधे** தயாநிதே-கருணைநிதியே **वृषशैलनाथदयिते** வ்ருஷஶைலநாததயிதே-வேங்கடாசலபதியினுடைய அன்பிற்கு உரியவளே **तवसुप्रभातम्** தவஸுப்ரபாதம்-உமக்கு நற்பொழுது புலருக.

---

**ஒவ்வொரு பைசாவையும் நல்வழியில் செலவு செய்.**

5. अत्र्यादिसप्त ऋषयस्समुपास्य सन्ध्यां
आकाशसिन्धुकमलानि मनोहराणि ।
आदाय पादयुगमर्चयितुं प्रपन्नाः
शेषाद्रिशेखर विभो तवसुप्रभातम् ॥

அத்ர்யாதி ஸப்த ரிஷயஸ் ஸமுபாஸ்ய ஸந்த்யாம்
ஆகாஶஸிந்து கமலானி மனோஹராணி ।
ஆதாய பாதயுகமர்சயிதும் ப்ரபன்ன:
ஶேஷாத்ரி ஶேகர விபோ தவஸுப்ரபாதம் ॥

**शेषाद्रिशेखरविभो** ஶேஷாத்ரிஶேகரவிபோ-சேஷமலேச் சிகரத்திலிருக்கும் ப்ரபோ **अत्र्यादिसप्तऋषयः** அத்ர்யாதி ஸப்தரிஷய:-அத்ரி முதலிய ஏழுரிஷிகள் **सन्ध्यां** ஸந்த்யாம் காலேச்சந்தியை **समुपास्य** ஸமுபாஸ்ய-உபாஸித்து **पादयुगम्** பாதயுகம்-திருவடிகள் இரண்டையும் **अर्चयितुं** அர்சயிதும்-தொழுவதற்காக **मनोहराणि** மனோஹராணி-அழகான **आकाश सिन्धुकमलानि** ஆகாஶ ஸிந்துகமலானி-ஆகாஶ கங்கையின் பத்மங்களை **आदाय** ஆதாய-எடுத்துக்கொண்டு **प्रपन्नाः** ப்ரபன்நா:-வந்து சேர்ந்து விட்டனர். **तवसुप्रभातम्** தவஸுப்ரபாதம்-உனக்கு நற்பொழுது புலருக.

6. पञ्चाननाब्जभव षण्मुख वासवाद्याः
त्रैविक्रमादिचरितं विबुधाः स्तुवन्ति ।
भाषापतिः पठति वासरशुद्धिमारात्
शेषाद्रिशेखरविभो तवसुप्रभातम् ॥

பஞ்சானனாப்ஜபவ ஷண்முக வாஸவாத்யா:
த்ரைவிக்ரமாதி சரிதம் விபுதா:ஸ்துவந்தி ।
பாஷாபதி: படதி வாஸரஶுத்திமாராத்
ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**शेषाद्रिशेखरविभो** ஶேஷாத்ரிஶேகரவிபோ-சேஷாசலத்திலுள்ள விபோ **पञ्चाननाब्ज भवषण्मुखवासवाद्याः** பஞ்சா

னுப்ஜபவஷண்முகவாஸவாத்யா:-அயன் அரன் கந்தன் இந்திரன் முதலிய **विबुधाः** விபுதா:-வானவர்கள் **त्रैविक्रमादिचरितं** த்ரைவிக்ரமாதிசரிதம்-மூன்றடிகளால் உலகளந்தது முதலிய திவ்யசரிதங்களை **स्तुवन्ति** ஸ்துவந்தி-புகழ்கின்றனர் **भाषापतिः** பாஷாபதி:-ப்ருஹஸ்பதி **आरात्** ஆராத்-தொலேவில் வணக்கத்துடன் நின்றுகொண்டு **वासरशुद्धिं** வாஸரஶுத்திம்-தினஶுத்தி கூறும் பஞ்சாங்கத்தை **पठति** படதி-படிக்கிறார் **तवसुप्रभातम्** தவஸுப்ரபாதம்-உனக்கு நற்பொழுது புலருக.

7. ईषत्प्रफुल्लसरसीरुह नारिकेल
 पूगद्रुमादि सुमनोहर पालिकानां ।
 आवाति मन्दमनिलस्सह दिव्यगन्धैः
 शेषाद्रि शेखरविभो तव सुप्रभातम् ॥

ஈஷத்ப்ரபுல்ல ஸரஸீருஹ நாரிகேல
 பூகத்ருமாதி ஸுமனோஹர பாலிகாநாம் ।
ஆவாதிமந்தமநிலஸ்ஸஹ திவ்யகந்தை:
 ஶேஷாத்ரி ஶேகரவிபோ தவஸுப்ரபாதம் ॥

**ईषत्प्रफुल्लसरसीरुहनारिकेल** ஈஷத்ப்ரபுல்லஸரஸீருஹ நாரிகேல-சிறிது மலர்ந்த தாமரைகளுடையவும் தென்னை மரங்கள் **पूगद्रुमादिसुमनोहर पालिकानाम्** பூகத்ருமாதிஸுமனோஹர பாலிகாநாம்-பாக்குமரம் முதலிய மரங்களின் மிகவும் அழகான பாளேகளுடைய **दिव्यगन्धैः सह** திவ்ய கந்தைஸ்ஸஹ—சிறந்தவாஸனேகளுடன்கூட **अनिलः** அநில:-காற்று **मन्दम्** மந்தம்-மெதுவாக **आवाति** ஆவாதி-வீசுகிறது **शेषाद्रिशेखरविभो** சேஷாத்ரிஶேகரவிபோ-வேங்கடாசலபதே **तव** தவ-உனக்கு **सुप्रभातम्** ஸுப்ர பாதம்-நற்பொழுது ஆகுக.

---

ஏகாதசியில் அன்னத்தை உண்ணுதே. பாபம்.



# பக்தியும் பரிவும்.



தியாகோபநிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

நமக்கு வேண்டியவர்கள் நாம் தனியே இருக்கிற பொழுது எவ்வளவு நிந்தித்தாலும், கஷ்டப்படுத்தினாலும் பொறுத்துக்கொள்ளுகிறோம். நாலுபேர் முன்னிலையில் நம்மை அவமானப்படுத்தியோ, மட்டந் தட்டியோ பேசினால், யாருக்கும் பொறுப்பதில்லை. இது விஷயத்தில் தந்தையிடத்திலும் தனயனும் மனம் நொந்துகொள்ளுகிறான். தியாகராஜ ஸ்வாமிகளுக்குத் தந்தையும் தாயும் ராமனே. அந்த ராமபிரானே தனக்கு இதைச் செய்துவிட்டானே என்று கதறுகிறார்.

ஸ்வாமிகளுக்கு ஒரு தமையன் உண்டு. அவருக்கு பக்தியும், வித்தையும் இல்லை. ஆனால் லௌகீக புத்தி நிறைய இருந்தது. தன் தம்பி நாளெல்லாம் வீணைகப் பாடிப்பாடி பஜனை செய்வது அவருக்குப் பொறுக்க வில்லை. அதற்குப் பரிகாரமாக, ஒருவருக்கும் தெரியாமல், ஸ்வாமிகள் பூஜித்திருக்கும் ராம விக்ரஹத்தையே காவேரியில் வீசி எரிந்துவிட்டார். விக்ரஹத்தைக் காணாமல் வாடின ஸ்வாமிகள், இது தன்னுடைய தமையனின் காரியம் என்று அறிந்தும் அவரை நோகாமல் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியையே கோபித்துக் கொள்ளுகிறார்.

ராகம்—பைரவம்] பல்லவி. [தாளம்—ஆதி

மரியாத காதய்யா மனு பவதே மய்ய

அனுபல்லவி.

ஸரிவா ரலலோ நன்னு ஸௌகஸே யுடெல்ல
ஹரிஹரி நீவண்டி கருண நிதிகி— (ம)

சரணம்.

தனவார லன்யுலனே தார தம்யமு முனு
கனுடைன தாசரதிகே கலதனி கீர்த்தி கதா

---

ஒருவேளைகூட காயத்ரியை மறவாதே. மஹாபாபம்.

நின்னு பாயநேரனி நன்னு ப்ரோவ குண்டேதி
தனதஸ குடகு த்யாகராஜ பூஜித— (ம)

**பொருள்:—**

*பல்லவி:* உனக்கு நல்லதா, தருமமா, முறையா, உனக்கேற்றதுதானு? (மரியாத காதய்யா—என்ற பத ப்ரயோகத்தின் அழகும், அதைப் பாடும்பொழுது ஸ்வாமிகளின் ஹ்ருதய அர்த்த பாவம் வெளிப்படுகிறது என்பதும் அறியவேண்டியது). என்னை ஏன் (இப்படிச் செய்துவிட்டாய்?) காப்பாற்றுமல் விட்டுவிட்டாய்?

*அனுபல்லவி:* சரி நிகரானவர்களிடத்தில் (என்னைப் போன்றவர்கள் முன்னிலையில்) என்னைப் புறக்கணித்து விட்டாயே! உன் போன்ற கருணை நிதிக்கு இது அழகல்ல.

*சரணம்:* தன்னைச் சேர்ந்தவன், அன்னியன் என்ற வித்தியாசம் இல்லையா? தசரதன் பிள்ளை சீமானை உனக்கு (ஓர் ஏழை தியாகராஜன் என்ன ஜோடி என்ற) எண்ணமுண்டா? உன்னைப் பிரிந்தே அறியாத என்னைத் தவிக்கச் செய்வது முறையல்ல.

*கருத்து:* உன் பக்தனை என்னை நீர் பிரிந்து இருப்பதே எனக்கு மீளாத் துயரம். பிறர் முன்னிலையில் அவமானம். காப்பாற்றுவது உன் உரிய கடமை.

---



---

**உன் கதிக்கு நல்லதை முதலில் தேடிக் கொள்.**

vைத்தியப் பகுதி.

# ஆயுர்வேதம். (16)

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

சதா உட்கார்ந்திருத்தல், கடினமான ஆஸனத்தில் அமர்தல், ஸைகிள் போன்ற வாகனங்களில் அதிக தூரம் தினமும் போதல், ஆகியவைகளை விலக்கவேண்டும். சக்திக்கு ஏற்றவாறு வியாயாமம் (தேகப்பயிற்சி) தேவை. (பிரத்தியேகப் பயிற்சி ஒன்றும் முடியாவிடில் தினமும் காலையிலோ மாலையிலோ 2-மைல் தூரம் நடக்கவும்).

**நவீன மருந்துகள் :** மலச்சிக்கலுக்கு, லிக்விட் பாரபின் (Liquid Paraffin) இரவில் ஒரு அவுன்ஸ் சாப்பிடவும். இதை அளவாக உபயோகிக்கவும். பாரபின் கலந்த மருந்துகள் சில உபயோகப்படும். அகரால் (Agarol) இரவில் அரை அவுன்ஸ், இவ்வகையைச் சேர்ந்தது. வலி அதிகமாக இருக்கும்போதும், இரத்தம் போகும்போதும் குதத்திற்குள் போடக்கூடிய மருந்துகள் பல உள்ளன. (1) அங்கு அண்டம் – காலி – கம்–ஒபியோ. (Unguen-Galli–Cum–Opio) என்ற களிம்பை சுண்டைக்காய் அளவு விரலில் எடுத்து ஆஸனத்திற்குள் செலுத்தவும். (2) கலொமல் (Calomel 160 grains) 1 அவுன்ஸ் வாஸலினில் சேர்த்து இரத்தம் அதிகமாகப்போகும்போது, களாக்காய் அளவு ஆஸனத்திற்குள் செலுத்தவும். (3) அநூஸால் (Anusol) ஹெடன்ஸா (Hadensa) நியுபர்க்கெயினல் (Nupercainal) போன்ற மருந்துகள் ஏதாவதொன்றை வாங்கி உபயோகிக்கலாம். இவைகளைக் குதத்தில்செலுத்த குழாய் ஒன்றுகூட இருக்கும். தினம் 3தரம் போடலாம்.

மூலரோகத்திற்கு ஏற்ற சிகித்ஸை ரணவைத்தியமே (Surgical Treatment). ஆரம்பகாலத்தில் இன்ஜெக்ஷன் முளையில் செய்து சுருங்கும்படிச் செய்வார்கள். முளைகள் வளர்ந்துவிட்டால், அவைகளை அறவே வெளிப்படுத்துவது (Excision) தான் சரியான சிகித்ஸை. இதற்கு கைதேர்ந்த ரணவைத்திய நிபுணர்களிடம் சென்று வைத்தியம்செய்து கொள்ளவேண்டும்.

ஏதாவதொரு முக்கியமான காரணத்தால் ரண சிகித்ஸை செய்துக்கொள்ள முடியாவிடில், ஆகாரத்தைச் சரிப்படுத்தி, மலச்சிக்கலைப் போக்கி, தொந்தரவு உள்ள

---

**பிறகு குடும்பத்திற்கு ஊருக்கு உழைக்கலாம்.**

போது தேவையான மருந்துகளை உபயோகித்து மனே திடத்துடன் வாழ்க்கையை நடத்தவேண்டும்.

### ஔஷத வர்க்கம்.

**பிப்பிலி மூலம் :** திப்பிலிக்கட்டை, மோடி என்றெல்லாம் பெயர். கடு ரஸம் – உஷ்ண வீர்யம் – லகு–ரூக்ஷம்–தீபனம்–பாசனம்–பேதனம் (மலத்தை இளகச் செய்தல்) பித்தகரம் – கப வாதஹரம் – உதர ரோகம் – ஆராகம் – பிலீஹ விருத்தி – குல்மம்,–கிருமி –சுவாஸம் இவைகளைப் போக்கும். (1) பிப்பிலி மூலம் 4 பங்கு மிளகு 1 பங்கு சேர்த்து அரைதோலா இடையை கால்படி பசும்பாலில் விட்டுக் காய்ச்சி திப்பியை எடுத்துவிட்டு சாப்பிட பாலூட்டும் தாயார்களுக்கு ஸ்தன்யம் அதிகரிக்கும். (2) விஷம ஜ்வரத்தில் கால்படி பாலில் அரைத்தோலா மோடி போட்டுக்காய்ச்சி வடிக்கட்டி, கால்பலம் நெய் அரைப்பலம் தேன் சேர்த்துச் சாப்பிடவும். (3) இதை பால்விட்டு அரைத்துக் கல்கமாக அரை தோலா பாலில் கலக்கிச் சாப்பிட நாவறட்சி, தேகவலி, வாததோஷம் போம். (4) மோடியை சன்னமாகப் பொடிசெய்து மூக்கில் ஊத மயக்கம், மாரடைப்பு நீங்கும். கபம்வெளிவரும். வாயு அடங்கும்.

சுக்கு, மிளகு, திப்பிலி, மோடி இவைகளுக்கு **சதுரூஷணம்** எனப்பெயர். திரிகடுகு போன்ற குணம். **யானைத் திப்பிலி :** கஜபிப்பலி, கரித்திப்பிலி என்றும் பெயர்கள். கடுரஸம்–உஷ்ண வீர்யம்–வாத கப ஹரம் பொடிசெய்து வஸ்திரகாயம் பண்ணி, 15 கிரெயின்ஸ் தேனிற் குழைத்து தினம் இருமுறை சாப்பிட ஈளை, இருமல், சுவாஸகாஸம், குரற்கம்மல், அஜீர்ணபேதி, வயிற்றுப் பொருமல் இவை போம்.

**சவ்யம் :** யானைத் திப்பிலியின் கட்டை, மோடியின் குணங்களை யுடையன. இதன் கல்கத்தை (பால் விட்டு அரைத்தது) சுண்டைக்காய் அளவு தினம் இருமுறை உட்கொள்ள, அர்சஸ், க்ஷதகாஸம் இவைகளைப் போக்கும்.

**சித்ர மூலம் :** சித்ரகம், கொடிவேலி (கறுப்பு-சிவப்பு -வெளுப்பு) எனவும் பெயர்.

கடுரஸம்-கடு விபாகம்-அதிக உஷ்ண வீர்யம்-லகு ரூக்ஷம்-பாசனம்-தீபனம்-வாதஹ பகரம்-க்ரஹணி-குஷ்டம் சோதம்-அர்சஸ்-கிருமி-காசம் இந்த ரோகங்களில் உபயோகம்,

---

(1) சித்ர மூல கல்கத்தை ஒரு பானைக்குள் மெல்லியதாய் தடவி உலர்ந்த பிறகு, அதில் தயிரையாவது மோரையாவது விட்டுவைத்து சாப்பிட அர்சஸ் ரோகம் குணமாகும். (2) சிறிதளவு (30 கிரெய்ன்ஸ்) கல்கமாக மோருடன் உட்கொள்ள அதிஸாரம் நிற்கும். (3) சித்ர மூல கஷாயம் மூத்திரத்தில் வெண்மையான மணல் மாதிரி கண்டால் (ஸ்கதா மேகம்) சாப்பிடவும். அரை அவுன்ஸ் தினம் இருமுறை, (4) சித்திர மூலவேர்பட்டை அதிமதுரம்-அதிவிடயம்-இந்துப்பு - கடுக்காய் - நெல்லிக்காய்-தான்றிக்காய்-கருவேலன்பட்டை-கோட்டம்- சுக்கு -மிளகு—திப்பிலி-நெல்லிமுள்ளி இவைகளின் சூர்ணம் 1 பலம் (ஒவ்வொரு வகைக்கும்), எடுத்துக்கலந்து கொள்ளவும். காலை, மாலை ½-1 விராகனிடை மோருடன் சாப்பிட அஜீரணபேதி, அஜீரணம், மஞ்சக் காமாலை இவை நீங்கும். தேகத்திற்கு வலிமை உண்டாகும். உணவில் உப்பை நீக்கினால் நல்லது. (6) வேரை நல்லெண்ணை விட்டரைத்து கண்டமாலை, அரையாப்பு கட்டி இவைகளுக்கு பற்று போடலாம். (7) சித்ர மூல வேர்பட்டை, பறங்கி பட்டை, பிரப்பங்கிழங்கு, மிளகு வகைக்கு 3 விராகனிடை இடித்து, 4 படி நீரில் போட்டு அரைப்படியாய்க் காய்ச்சி, தினம் 2 அவுன்ஸ் மும்முறை சாப்பிட வாயுவினால் உண்டாகும் தேகக் குத்தல் போம்.

**குறிப்பு:** இது ஒரு தீக்ஷ்ணமான மூலிகை. அக்னி அநல என்றும் பெயர். கருப்பையிலுள்ள கருவை (உள்ளுக்குக் கொடுத்தோ கருப்பையினுட்செலுத்தியோ) அழிக்க உபயோகிப்பார்கள். இதனால் சிலசமயம் கர்ப்பிணியின் உயிருக்கே ஆபத்தாய் விடுகிறது. வைத்ய முறையில் இதைக் கண்டிக்கப்படுகிறது. தண்டனையும் விதித்துள்ளது.

திப்பிலி, மோடி, சவ்வியம், சித்ரமூலம், சுக்கு ஆகிய ஐந்தும் சேர்ந்து **பஞ்சகோலம்** எனப்பெயர். கடுரஸம்-கடுவிபாகம்-உஷ்ணவீர்யம்-தீக்ஷணம்-பாசனம்-தீபனம்-ருசிகரம்.

பஞ்சகோல சரக்குகளுடன் மிளகு சேர்ந்தால் ஷடுஷணம் என்று பெயர். பஞ்சகோல குணங்களையே உடையன. விஷ விகாரங்களைப் போக்கும்.

ஓம் தத் ஸத்.

---

**மநமார எவருக்கும் துரோஹம் செய்யாதே.**

## ஸந்தேஹ விளக்கம்.

ஸாகி. வெங்கட்டராமய்யர், மிலட்டூர்.

25. நாராயணம் என்ற பாரத சுலோகத்தில், நரன் யார் நரோத்தமன் யார்?

ஸ்ரீ நாராயணன் தனது அம்சத்தால் நரநாராயணர் என்ற தர்ம தேவதையின் இரு புத்ரர்களாகத் தோன்றி பதரிகாச்ரமத்தில் தவம் செய்தனர். அவர்களே நரனாகவும் நரோத்தமனாகவும் (அர்ஜுன கிருஷ்ணராகவும்) அவதரித்தார்கள். ஆதலால் மஹாவிஷ்ணு, நரநாரயணரெனும் அர்ஜுன கிருஷ்ணர்களை நமஸ்கரித்து பாரதம் கூற வேண்டும் என்பது பொருள்.

26. கிருஷ்ணன் ஸகாயத்தை நாடிவந்த துர்யோதநனுக்கு தன் ஸேனைகளைக் கொடுத்தார். தூதனாக வந்தபோது துர்யோதநன் அயோக்யன் என்று கூறினர். இது முன்னுக்குப்பின் முறணல்லவா?

பந்து என்ற முறையில் அயோக்யன் என்று தெரிந்தே ஸேனைகளைக் கொடுத்தார். அன்றியும் பூபாரத்தை அகற்ற வந்த கிருஷ்ணன் தன் ஸேனையும் பாரமென்றே எண்ணினர்.

A. ராமமூர்த்தி தீக்ஷிதர், கோனேரிராஜபுரம்.

27. கணேசஹோமத்தில் பல ஸம்ப்ரதாயத்தைக் கூறியிருக்கிறது நம் பத்ரிகை. எதைக் கொள்வதென விவரமாகக் கூறுங்கள்.

அவரவர் தேசஸம்ப்ரதாயம், குரு உபதேசம் எப்படியோ அப்படித்தான் அந்தந்த த்ரவ்யங்களைக் கொண்டு செய்ய வேண்டுமாதலால் "இதைவிட விரிவாக" நாம் கூறுவதற்கில்லை.

V. G. கோகுலபால சர்மா M. A. L. T. மயிலை.

28. நோய்வாய்ப்பட்டு எழுந்திருக்கமுடியாத நிலையில் ஆஸ்பத்திரியிலிருக்கும்போது பெற்றோர் ச்ராத்தம் வந்தால் என்னசெய்வது?

ஸௌகர்யமாகி வந்தபின் கிருஷ்ணபக்ஷ ஏகாதசியில் அல்லது அமாவாஸ்யையில் அதைச்செய்யவேண்டும்.

---

### சந்தாதாரர்களுக்கு ஓர் விக்ஞாபனம்.

*13ம் ஆண்டு புஸ்தகத்தைத் தொடர்ந்து அனுப்புங்கள், சந்தாவை கூடிய சீக்கிரமனுப்பி வைக்கிறேன் என்று கடிதம் எழுதிய சந்தாதாரர்கள் சந்தாவை அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

*சந்தாவை அனுப்பும்போது சந்தா நம்பரைக் குறிப்பிடுங்கள்.

---

ப்ரதி திநமும் சிறிதாவது தானம் செய்.

# மாசிமீ கோசாரப்பலன்

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

## மேஷ ராசி

### அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

குரு, சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிருர்கள். சூரியன் ஜீவனத்திலிருக்கிருர். இதனுல் சரீர அசௌக்யம் ஏற்பட்டு குணமாகும். வெளியூர் போய்வரும்படி ஏற்படும். முயற்சித்த காரியங்கள் ஸாதகமாகும். பிறர் உதவி ஏற்படும். சுபமுயற்சிகள் தடைப்பட்டு வருவதாகும். சஷ்டிகவசம் பாராயணஞ் செய்துவருவது நலம்.

## ரிஷப ராசி

### க்ருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு, சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும் இருக்கிருர்கள். செய் தொழிலில் சிக்கல்கள் ஏற்படும். பிறர் உதவியை நாடும்படியாகும். பந்துக்கள் சினேகிதர்கள் இவர்களின் பிரிவு ஏற்படும். வருமானமிருந்தும் நிம்மதி யிராது. சிலருடன் பகை ஏற்படும். லலிதா ஸஹஸ்திர நாம அர்ச்சனை செய்வது நலம்.

## மிதுன ராசி

### மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம் பாதம் முடிய

குரு, சனி ஏழிலும், ராகு சுகத்திலும், கேது ஜீவனத்திலு மிருக்கிருர்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிருர். இதனுல் குடும்ப நடப்பில் கவலை, ராஜாங்க மூலமான கிலேசம், சிலரை நம்பி ஏமாறுதல், அதிகாரியால் கவலை, வீண் விவாதம், சுபகாரியத் தடைகள் இப்படி ஏற்படும். மஹா விஷ்ணுவுக்கு அபிஷேகம் செய்வது நன்மை.

## கடக ராசி

### புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு, சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலுமிருக்கிருர்கள். சூரியன் ஏழிலிருக்கிருர். இதனுல் விவாதமூலம் கவலை, பந்துஜனங்கள் பகையாதல், தேகசுகம் பாதித்துக் குணமாதல், கொடுப்பல் வகை நிர்ப்பந்தம், வீண்வகையில் செலவு செய்ய நேரிடுதல், சினேகிதரால் வருத்தம் இப்படி ஏற்படும்.

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு, சனி பஞ்சமத்திலும், ராகு குடும்பத்திலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிருர்கள். சூரியன் ஆறிலிருக்கிருர். இதனுல் சத்துரு கவலை, பழைய காரிய நன்மை, அலைச்சல் காரியம் ஏற்படல், பந்து சேர்க்கை உண்டாதல், பெரிய மனுஷ்யர்கள் நேசம், புதிய சினேகம் இப்படி உண்டாகும். ஆதித்ய ஹிருதயம் பாராயணஞ் செய்துவருவது நலமாம்.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு, சனி நான்கிலும், ராகு ராசியிலும், கேது ஏழிலுமிருக்கிருர்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிருர். இதனுல் நிர்ப்பந்தமான தொழில், தேகசுகம் பாதித்தல், வரவேண்டியவை தடையாதல், சிலர் பகை ஏற்படல், சினேக ஆதரவு, வெளியூர் போய்வருதல், குடும்ப சுகம் இப்படி ஏற்பட்டு வரும். நவக்கிரஹ ஹோமம் செய்ய கிலேசம் நீங்கும்.

---

**ப்ரதி தினமும் பகவன் நாமாவை முடிந்தவரை ஜபி.**

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு, சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் வெளியூர் போய் வருதல், சிலருக்கு இடமாற்றம், வீண்வகைச் செலவுகள், சிந்தனை மிகுதி, பந்துவால் கிலேசம், குடும்பச் செலவுகள் அதிகமாதல், பெரியோர் நேசம், புண்ணிய வகை செலவுகள் இப்படி ஏற்படும். அம்பாளைப் பூஜித்து அர்ச்சனை செய்வது நன்மையாகும்.

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு, சனி இரண்டிலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் செய்தொழிலில் சிக்கலும், செலவும் ஏற்பட்டு பின் அனுகூலமாகும். புதிய முயற்சிகள் கூடி வரும். பிறர் சகாயம் ஏற்படும். ஆரோக்கிய விஷயமாய் செலவு செய்யும்படியாகும். சரீர சோர்வு ஏற்படுவதாகும். சுப்ரமண்யருக்கு அபிஷேக அர்ச்சனை செய்யவும்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு, சனி ராசியிலும், ராகு ஜீவனத்திலும், கேது சுகத்திலும் இருக்கிறார்கள். சூரியன் தனத்தில் இருக்கிறார். இதனால் புதியவகை ஏற்பாடு உண்டாகும். நல்லோர் நேசம் ஏற்படும். சிலரிடம் பகை ஏற்படும். குடும்ப செலவுகள் அதிகமாகும். பந்துவகையில் கிலேசம் உண்டாகும். சுப முயற்சிகள் கூடிவருவதாகும். குருவாரத்தில் அன்னமிடுவது நலம்.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு, சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலும் இருக்கிறார்கள். சூரியன் ராசியில் இருக்கிறார். இதனால் ராஜாங்கமூலமான கவலை, ஆரோக்கிய வகையில் செலவு, பிறர் உதவி நாடுதல், வீண் பிரயாசை, நம்பி ஏமாறுதல், குடும்ப செலவு மிகுதியாதல், வீண் விரோதம், எதிலும் தடை இப்படி ஏற்படும். சனிக்குப் பிரீதியாய் நவக்கிரக பிரதக்ஷணம் செய்து வருவது நலம்.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு, சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது இரண்டிலும் இருக்கிறார்கள். சூரியன் விரயத்திலிருக்கிறார். இதனால் சில்லரைக் கொடுப்பலால் நச்சரிப்பு, குடும்ப நடப்பில் கிலேசம், சினேகிதர் பிரிவு, வெளியூர் போக சிந்தனை, தெய்வ காரியங்களில் நாட்டம், சில பொருள் வாங்குதல் இப்படி ஏற்படும். துர்க்காதேவிக்கு அபிஷேகம் செய்ய நன்மை.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு, சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்திலிருக்கிறார். இதனால் அலைச்சல் வேலை அதிகமாதல், புதிய வகை ஏற்பாடுகளில் நாட்டம், பெரியோர் நேசம், விவாதம் ஏற்படல், வேலையாட்களால் கவலை, வீண் செலவுகள், சிலர் பகையாதல், நிம்மதி குறைதல் இப்படி ஏற்படும். ருத்திர ஜபம், அபிஷேகம் செய்வது நலம்.

---

**பகவானுக் களிக்காத பொருளை உண்ணாதே.**

# கல்கி புராணம்.

## த்ருதீயாம்சம்—மூன்ரும் அத்யாயம்.

வந்த மஹரிஷிகள் அனைவரையும் தக்கபடி பூஜித்து ஆஸனத்திலமர்த்தி அவர்களைப் பார்த்து பகவான் கூறினார்: சூர்யனைப்போல் ப்ரகாசிக்கின்ற மஹரிஷிகளே! எனது பாக்யத்தினால் இங்கு எழுந்தருளிய நீங்கள் யார்? தீர்த்தாடனம் செய்வது என்ற வ்யாஜத்தினால் ஆங்காங்கு சென்று முவ்வுலகிற்கும் பேருபகாரம் செய்கிறீர்கள். உங்களது கருணை நிறைந்த கடாக்ஷத்திற்குப் பாத்திரமான நாங்கள் புண்யவான்களாகவும் பாக்யவான்களாகவும் நல்ல கீர்த்தி உள்ளவர்களாகவும் ஆவோம். பிறகு வாமதேவர், அத்ரி, வஸிஷ்டர், காலவர், ப்ருகு, பராஶரர், நாரதர், அஶ்வத்தாமா, ராமர், க்ருபர், த்ருதர், தூர்வாஸர், தேவலர், கண்வர், வேதப்ரப்ருதி, அங்கிரஸர் முதலிய மற்றும் எண்ணிறந்த பற்பல மஹர்ஷிகள் வந்திருந்தனர். அனைவரும் உக்ரமான தவமும் தீக்ஷ்ணமான வ்ரதமும் உடையவர். சந்த்ர சூர்யர்களது குலத்தில் உதித்த மரு தேவாபி என்ற மஹாவீர்யவான்களும் தபஸ்விகளுமான அரசர்களை எதிரில் நிறுத்தி ஸந்தோஷத்துடன் கல்கியை வணங்கிக் கூறினார்கள். தேவரிஷிகள் பாற்கடலிலுள்ள மஹாவிஷ்ணுவை வணங்கிக் கூறுவது போலிருந்தது அது. ஸர்வலோக நாதனை ஹே ப்ரபோ! ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களை நடத்தும் தாங்கள் எல்லோருடைய மனதில் இருப்பதையும் அறிவீர்கள். காலம் கர்ம குணமிவைகளுக்கு ஏற்றவண்ணம் உருவமெடுப்பவனே! ப்ரஹ்மாதிகளால் துதிக்கப்பட்ட பாதாரவிந்த முள்ளவனே! பத்மநாப! எங்களுக்குத் தயைபுரிய வேண்டும்! என்றனர்.

இதைக்கேட்டு சந்தோஷமடைந்து பகவான் இவ்விருவர்கள் தபஸ்விகள் போலும் மஹாபலம் பொருந்திய க்ஷத்ரியர்கள் போலும் உங்கள் முன்னே காணப்படுகின்ரூர்களே! இவர்கள் யார்? எதற்காக இங்கு வந்தார்கள்? அவர்கள் கங்கையைத் துதிசெய்வதைக் கேட்டேன், அவர்களுடைய பெயரென்ன? என்று பகவான் கேட்டார். அவ்விருவர்களில் மரு என்பவர் பத்தாஞ்சலிபுடனுக நின்று வினயத்துடன் தனது வம்ஶ பரம்பரையைக் கூறினார். எல்லாமறிந்த உங்கள் எதிரில் அறிந்த வரையிலும் கூறுகிறேன். தங்களது நாபியிலிருந்து உண்டான பிரம்மா, மரீசி, மனு, இக்ஷ்வாகு, யுவனாஶ்வன், மாந்தாதா,

புருகுத்ஸன், அனரண்யன், த்ரஸதஸ்யு, ஹர்யஶ்வன், அருணன், த்ரிஶங்கு, ஹரிச்சந்த்ரன், ஹரிதன், ப்ருகன், வ்ருகன், ஸகரன், அஸமஞ்ஜஸன், அம்ஶுமான், திலீபன், பகீரதன் முதலிய புத்ரபரம்பரை தோன்றிற்று. அதில் "பகீரதனே தங்கள் பாதத்திலிருந்து பெருகும் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்து" பாகீரதீ என்ற பெயர் பெறும்படிச் செய்தான். பாகீரதியை எல்லோரும் பூஜித்துத்துதித்து, அதில் ஸ்நானம் செய்து தங்களது பாபத்தை நீக்கிக்கொள்கிருர்கள்.

அந்த பகீரதனிடமிருந்து ருதுபர்ணன், ஸுதாஸன், ஸௌதாஸன், அஶ்மகன், மூலகன், தஶரதன், ஏடவிடன், விஶ்வஸஹன், கட்வாங்கன், தீர்கபாஹுகன், ரகு, அஜன், தசரதன் என்ற புத்ரபரம்பரை தோன்றிற்று. தாங்கள் தசரதனிடமிருந்து ஸாக்ஷாத் ராமனுகத் தோன்றினீர்கள் என்ருர். இதைக்கேட்ட கல்கி ராமசரிதத்தை விஸ்தாரமாகக் கூறும்படிக் கூறினர். தாபத்தையும் பாபத்தையும் போக்கடிக்கும் ராமசந்திரனுடைய சரிதத்தை வர்ணிக்க ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனுமறியான். யான் எங்ஙனம் கூறுவது? எனினும் உமது அருளால் பாவனமான ராமசரிதத்தை அறிந்தவரைக் கூறுகிறேன். ஜனனமரணமில்லாத பகவான் ப்ரஹ்மாதி தேவர்களுடைய ப்ரார்த்தனைக்கிணங்கி சூர்ய குலத்திலே அரக்கர்களை அழிக்க தசரத புத்ரனுகத் தோன்றினர். இளமையிலேயே விஶ்வாமித்ரருடன் சென்று அவரது யாகத்தை அழிக்கும் அரக்கர்களை நாசம் செய்தார். கௌசிகரிடமிருந்து ஸகல அஸ்த்ர ஶஸ்த்ரங்களையும் பெற்று மிக்க பலமுள்ளதான சிவதனுஸ்ஸை முறிக்கக் கருதி, மிதிலாபுரம் சென்ருர். அவரது அழகைக்கண்டு ஜனகமகாராஜன் சிவ தனுஸ்ஸை முறிப்போருக்கல்லவோ ஸீதையைக் கொடுப்போமென்று ப்ரதிக்ஞை செய்தார். மிக்க ரூபலாவண்யம் வாய்ந்த இவருக்கு ஏற்றவள் ஸீதை! இவர் சிவதனுஸ்ஸை முறிக்காவிடில் என் செய்வது? என்று அச்சம் கொண்டார். பகவான் லீலையாக சிவதனுஸ்ஸை முறித்து ஸீதா தேவியை மணந்தார்.

அங்ஙனமே இலக்குமணன் ஊர்மிளையையும் பரத சத்ருக்னர் மாண்டவீ, ஶ்ருதிகீர்த்திகளையும் மணந்து அயோத்திக்குச்சென்ருர்கள். ராமருக்குப்பட்டாபிஷேகம் செய்ய முயற்சிக்கும் பொழுது அவரைக் காட்டிற்கு

அனுப்பி தனது புத்ரனை பரதனுக்கே பட்டம் சூட்டும்படி கைகேயி வரம்கேட்டாள். இராமன் ஸகல பொருள்களை யும் துறந்து லக்ஷ்மணன் ஸீதையுடன் தபோவனம் சென்றார். பஞ்சவட ஆஶ்ரமத்தில் தன்னை அழைக்கவந்த பரதன் மூலமாக தந்தையின் மரணத்தைக்கேட்டு வருந்தி பதினான்கு ஆண்டுகள் கழித்து வருவதாகக் கூறி அவனை ஊருக்கு அனுப்பினார். இராவணனது ஸஹோதரியான சூர்பனகை ராமனது அழகைக்கண்டு மயங்கி ராமனைத் தன்னை மணந்துகொள்ளும்படி நிர்பந்தம் செய்யவே அவர் உத்தரவுப் பெற்று லக்ஷ்மணன் அவளது மூக்கை யும் காதையும் அறுத்தார். அவளால் தூண்டப்பட்ட கர தூஷணன் த்ரிஶிரஸ் முதலிய பதினான்காயிரம் ராக்ஷஸர் கள் போருக்குவர அவர்களைக் கொன்றார். இராவணன் மாரீசனை மாயாமானாக வரும்படிச் செய்ய ராமர் அவன் பின்னால் போகும்பொழுது ஸீதையை அபஹரித்தான் இராவணன். ராகவன் ஸீதையை ஆங்காங்குத் தேடிச் சென்று, அடிபட்டு இறக்கும் ஜடாயுவைக்கண்டு இறந்த அவரைக் கொளுத்தி பரலோக கார்யங்களைச் செய்து, சுக்ரீவன் பதுங்கியுள்ள ருஶ்யமூக மலைக்கு வந்தார்.

சுக்ரீவனுடன் ஸக்யம் செய்துக்கொண்டு வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு இராஜ்யமளித்தார். சுக்ரீவன் உத்தரவுபடி வானரங்கள் ஸீதையைத் தேடச்சென்று ஸீதையைக் காணவில்லை என்று திரும்பினர். ஆஞ்ஜநே யர் ஸம்பாதி சொற்படி ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கை க்குச் சென்றார். அஶோகவனத்தில் ஸீதையைக்கண்டு ராமனிடம் வந்து ஸமாசாரத்தை அறிவித்தார். இராக்ஷ ஸர்களைக் கொன்று லங்கையை எறித்த ஆஞ்ஜனேயரின் பலத்தைக் கொண்டாடி ஸமுத்ரராஜனை ஶரணமடைய அவர் வராததால் அவர் மீது பாணப்ரயோகம் செய்தார். வணங்கி வந்த அவர் சொற்படி ஸமுத்ரத்தில் அணைக் கட்டி அக்கரைச் சென்று இராக்ஷஸர்களைக் கொன்றார். லக்ஷ்மணன் இந்த்ரஜித்தைக் கொன்றார். ப்ரஹஸ்தன் விகடன் கும்பகர்ணன் முதலியவர்களைக் கொன்று சுக் ரீவர் அங்கதன், முதலிய அனைவரும் ஸந்தோஷம் அடைந் தனர். அரிய வரங்களைப்பெற்ற மஹாவீரனான ராவ ணனோடு பயங்கரமாக யுத்தம் செய்தார். சீதையின் துக்கத்தினாலும் ராமன் பாணத்தினாலும் அடிப்பட்டு ராவ ணன் இறந்தான்.

தேவேந்த்ரன் முதலியவர்கள் ராமனைக் கொண்டாட விபீஷணனுக்கு லங்கா ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்வித்து ஸமஸ்த வானரர்களுடன் கூட புஷ்பக விமானமேறி அயோத்யைக்கு வந்தார். ஜடையையகற்றி திவ்யாலங்காரம் செய்து கொண்டு கைகேயி முதலிய மாத்ருகணங்களை வணங்கி அவர்கள் உத்தரவுபடி தந்தையின் ஸிம்ஹாஸனத்தை ஏற்ருர். வஸிஷ்டர் முதலிய மஹ ரிஷிகள் பட்டாபிஷேகம் செய்ய இந்த்ரன் போல் ராஜ்ய பரிபாலனம் செய்தார். இராம ராஜ்யத்தில் அனைவரும் தனிகர்களாகவும் தபஸ்விகளாகவும் ரோகம் பயம் முதலியவை இல்லாதவர்களாகவும் சுகமாகவும் வாழ்ந்தனர். காலத்தில் நல்லமழை பெய்தது. பூமி ஸுபிக்ஷமாக இருந்தது. பத்தாயிரம் வருஷம் ஸகல ஜனங்களையும் ஸந்தோஷப் படுத்திக்கொண்டு சிறந்த தக்ஷிணைத் தந்து பல அஶ்வமேதங்களைச் செய்தார். பிறகு ஏதோ ஒரு காரணம் பற்றி சிறிதும் தயவின்றி ஸீதையைக் காட்டிற்கு அனுப்பினர்.

வால்மீகி தன்னிஷ்டம் நிறைவேறுவதற்காக காட்டில் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும் ஸீதையை தனதாச்ரமத்திற்கு அழைத்துச் சென்ருர். அங்கே ரகுபதியின் குணங்களைப் பாடக்கூடிய குச லவர் என்ற இருபிள்ளைகளைப் பெற்றெடுத்தாள் ஸீதாதேவீ. வால்மீகி ஸீதாதேவியை இருகுமாரர்களுடன் ராகவனுடைய ஸமீபத்திற்கு அழைத்து வந்தார். புத்ரர்களோடு கண்ணீர் வடிக்கும் ஸீதையைப் பார்த்து, உனது தோஷத்தை யகற்றிக்கொள்ள நீ அக்னி ப்ரவேசம் செய் என்ருர். இதைக்கேட்ட ஸீதை உடனே அவருடைய திருவடியில் வணங்கி மணிகளாலும் ரத்னங்களாலும் அழகாயுள்ள பூதேவியின் அந்தப்புரத்தில் ப்ரவேசித்தாள். ஸீதையின்பிரயாணத்தைப் பார்த்து தனது ஸ்வரூபத்தை நினைத்துக்கொண்டு வஸிஷ்டருடைய உத்தரவினல் பட்டணத்து ஜனங்கள் கூடிவர, தம்பிமார்களுடன் ஸரயூ ஜலத்தி லிறங்கினுர் ஸ்ரீராமர். கர்ணும்ருதமான ராமசரிதத்தை ஶ்ரவணம் செய்பவர்கள் அல்லது படிப்பவர்கள் ஸம்ஸாரக் கடலைக்கடந்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைவர். ரோகத்தை அகற்றவும் தனம், புத்ரன், ஸுவர்க்கம் முதலிய ஸம்பத்துக்களைத் தரவும் வம்ஶத்தை வ்ருத்திசெய்யவும் ஸ்ரீ ராமசந்த்ரமூர்த்தி சக்தி வாய்ந்தவராவர்.

## த்ருதீயாம்சம் – நான்காம் அத்யாயம்.

ஸ்ரீராமனிடமிருந்து குஶன், அதிதி, நிஷதன், நபன், புண்டரீகன், க்ஷேமதன்வா, தேவாநீகன், ஹீநன், பாரிபாத்ரன், பலாஹகன், அர்கன், ரஜநாபன், ககணன், வித்ருதன், ஹிரண்யநாபன், புஷ்பன், த்ருவன், ஸ்யந்தநன், அக்நிவர்ணகன், ஶீக்ரன் என்ற புத்ரபரம்பரை பெறுகிற்று. அபரிமிதமான சக்திவாய்ந்த ஶீக்ரரே எனது பிதா. என்னைச் சிலர் மரு என்றும் சிலர் புதன் என்றும் சிலர் ஸுமித்ரகன் என்றும் அழைப்பார்கள். இதுவரை யான் கலாப கிராமத்தில் தவம் செய்து கொண்டிருந்தேன். தாங்கள், கலியை அடக்க அவதாரம் செய்திருப்பதாக பகவான் வியாஸர் கூறினர். கலியில் லக்ஷவர்ஷம் காத்திருந்து இப்பொழுது தங்களை வந்தடைந்தேன். தாங்கள் பரமாத்மா. தங்களைத் தர்ஶித்தால் கோடி ஜன்மங்களில் செய்த பாபங்களெல்லாம் அகலும். தர்மம் யஶஸ் இஷ்டம் நிறைவேறுதல் முதலிய ஸகல பாக்யங்களையும் பெறலாம் என்றார் மரு.

சூர்ய வம்ஶத்தில் உதித்த உன்னையும் நீ செய்த தவத்தையும் அறிந்தேன். உன் அருகிலுள்ள மகா புருஷ லக்ஷணம் வாய்ந்த இவர் யார்? என்று கல்கி வினவினர். உடனே தேவாபி எழுந்து பகவானை வணங்கி அஞ்ஜலி செய்து விநயத்துடன் விக்ஞாபனம் செய்து கொண்டார். ஓ பகவன்! பிரளயம் முடிந்தபின் உம்மிடமிருந்து பிரும்மா உண்டானர். அவரிடம் இருந்து அத்ரீ சந்த்ரன் புதன் புரூரவஸ் நகுஷன் யயாதி என புத்ர பரம்பரை தோன்றிற்று. யயாதி தேவயானியிடம் யது துர்வஸு என்ற புத்ரர்களை உண்டு பண்ணினர். சர்மிஷ்டை என்ற மனைவியிடம் த்ருஹ்யு, அனு, பூரு என்ற புத்ரர்களை உண்டுபண்ணினர். பூருஜன் மேஜயன் ப்ரசின்வன் ப்ரவீரன் மநஸ்யு அபயதன் உருக்ஷயன் த்ரய்யாருணி புஷ்பகாருணி ப்ருஹத் க்ஷேத்ரன் ஹஸ்தீ (இவர் பெயரால் தான் ஹஸ்தீநாபுரீ எனும் நகரம் உண்டானது.) அஜமீடன் த்விமீடன் புருமீடன் ரிக்ஷன் ஸம்வரணன் குரு.

பரீக்ஷித், ஸுதநு, ஜன்ஹு, நிஷத ஸுஹோத்ர, ச்யவநர், க்ருதீ, பிருஹத்ரதன், குஶாக்ரன், ரிஷபன், ஸத்யஜித், புஷ்பவான், நஹுஷன் என்ற புத்ர பரம்பரை வளர்ந்தது. பிருஹத்ரதன் மற்றொரு பார்யையினிடம்

ஜராஸந்தனைப் பெற்றான். அவனது புத்ரன் ஸஹதேவன். ஸோமாபி ச்ருதச்ரவஸ் ஸுரதன் விதுரதன் ஸார்வ பௌமன் ஜயத்ஸேநன் யுதாயு தேவாதிதி ரிக்ஷன் திலீபன் ப்ரதீபகன் என்ற புத்ரர் தோன்றினர். பிரதீ பனிடமிருந்து தேவாபி எனும் நான் உண்டானேன். ராஜ்யத்தை ஶந்துநுபுத்ரனிடம் அளித்துவிட்டு கலாப கிராமத்தில் தங்களைத் தர்சிக்கவேண்டுமென்று தவம் செய்தேன். மருவுடனும் மற்றுமுள்ள மஹரிஷிகளுட னும் சேர்ந்து நானும் தங்களைத் தர்ஶித்து முக்தி பெற வந்துள்ளேன் என தேவாபி கூறினர். இருவர்களும் கூறி யதைக் கேட்டு பகவான் கல்கி மந்தஹாஸத்துடன் அனை வரையும் ஆஸ்வாஶப்படுத்திக் கூறினர்.

நீங்களிருவரும் உத்தம க்ஷத்ரிய வம்ஶத்தில் உதித்த வர்கள். தர்மத்தை நன்ருக அறிந்தநீங்கள் என்னுக்ஞையை நிறைவேற்றி ராஜ்யபாரம் செய்யுங்கள். மரோ! உனது பூர்விகர்கள் ஆண்டுவந்த அயோத்யா நகரத்தில் உன்னை அரசனுக அபிஷேகம் செய்கிறேன். குடிகளை ஹிம்ஸிக்கும் ம்லேச்சர்களையும் தர்ம நெறி தவறியவர்களையும் நாம் சிக்ஷிப்போம். தேவாபே! புக்கஸ என்ற துஷ்டர்களைப் போரில்கொன்று ரிஷிக்கு ஸமமான உன்னை ஹஸ்திநபுரத் தில் அபிஷேகம் செய்கிறேன். நான் மதுரையிலிருந்து உங்களுக்குண்டாகும் பயத்தை அகற்றுகிறேன். போ ரில் சய்யாகர்ண உஷ்ட்ரமுக ஏகஜங்க முதலிய கோஷ்டி களைக்கொல்வேன். க்ருதயுகத்தை உண்டுபண்ணி பிரஜைகளைக் காப்பாற்றுகிறேன். நீங்கள் தபோ வேஷ த்தை வீட்டு உத்தம வீரர்களைப்போல் ஆயுதங்களை ஏந்தி ரதத்திலமர்ந்து என்னுடன் யுத்தரங்கத்திற்கு வாருங்கள்.

தேவாபே! விஶாகயூபன் மிக்க அழகு வாய்ந்த ஸுந்தரீ எனும் கன்யகையை உனக்களிப்பான். அவளை நீ மணந்து உலக க்ஷேமத்திற்காக என்னுடைய சொற்படி நட. தேவாபே! அன்றியும் ருசிராச்வனுடைய பெண் ணுன ஶாந்தியையும் மணந்துகொள். இங்ஙனம் பக வான் கூறிய ஹிதகரமான மொழிகளைக்கேட்டு முனிவர் களும் இவ்வரசகர்களும் பேரானந்தமடைந்தனர். இவர் ஸர்வேச்வரனே என்று உணர்ந்து ஆச்சர்யமடைந்தனர். இங்ஙனம்இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ஆகா யத்திலிருந்து சூர்யனைப் போல் ப்ரகாசிப்பதும் பலவகை யான மணிகளால் அலங்கரிக்கப்பட்டதும் யஜமாநன்

நினைத்தபடி செல்வதும் எண்ணிறந்த ஆயுதங்கள் நிறைந்ததுமான இரண்டு ரதங்கள் வந்தன. விச்வகர்மாவினால் நிர்மாணம் செய்யப்பட்ட அத்யாச்சர்யமான இரு ரதங்களையும் கண்டு ஸபையில் உள்ள அரசர்களும் ரிஷிகளும் இது என்னவென்று பகவானைக் கேட்டார்கள். கல்கி கூறினார்:- இவ்விருவர்களும் ஆதித்யன், ஸோமன், இந்திரன், யமன், குபேரன் முதலிய திக்பாலகருடைய அம்சத்தினால் உலகைக்காக்க க்ஷத்ரியர்களாகத் தோன்றினார்கள். இதுவரை தன்னுடைய ஸ்வரூபத்தை மாற்றிக்கொண்டு தவம் செய்தார்கள். நான் அவதரித்த பின் இருவர்களும் இங்கு வந்தார்கள். அவர்களுக்காக என்னுடைய ஆக்ஞையினால் இந்த்ரன் அளித்த இரு ரதங்களும் இங்கு வந்திருக்கின்றன. இதில் இவர்கள் ஏறிக்கொண்டு என்னோடு வருவார்கள், என்று பகவான் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது ஆகாயத்தில் புஷ்பமாரிப் பொழிந்தது. துந்துபிகள் முழங்கின. மஹரிஷிகளும் துதிசெய்தார்கள். கங்கா ஜலத்திவலைகளுடனும் பரமசிவனது விபூதி தூளிகளுடனும் மந்தமாருதம் வீசியது. அச்சமயம் அழகிய சரீரம் வாய்ந்தவரும் உருக்கிய தங்கம்போன்ற திருமேனிஉடையவரும் தர்மத்திற்கு இருப்பிடமானவரும் அழகான ஜடையுடையவரும் கரத்தில் தண்டம் ஏந்தியவரும் உலகத்திற்கெல்லாம் மேலானவரும் தனது திவ்ய தேஜஸ்ஸினால் ஸகல அதர்மங்களையும் போக்கடிப்பவரும் தேஜோராசியும் ஸனகர்களுக்கு ஸமானமாய் இருப்பவரும் தாமரைக்கண்ணனுமான ஒரு பிரம்மசாரி வந்தார்.

## த்ருதீயாம்சம் — ஐந்தாம் அத்யாயம்.

அவரைக்கண்டவுடன் கல்கி ஸபையிலுள்ள அனைவருடன் கூட எழுந்து வணங்கி அர்க்யபாத்யாதிகளை அளித்து அவரைப்பார்த்து ஸகலலோகத்தாலும் பூஜிக்கத்தக்க தாங்கள், எங்களின் பாக்கியத்தினாலிங்கு வந்தீர்கள். தாங்கள் யார் ? உலகில் பூர்ணமானவர்களும் பாபலேசம் இல்லாதவர்களும் எல்லோருக்கும் நல்லவர்களுமான தங்களைப் போன்ற ஸாதுக்கள் உலகத்திலுள்ளவர்களை உய்விக்க ஆங்காங்கு ஸஞ்சரிக்கின்றார்கள் என்றார். இதைக்கேட்ட பிரம்மசாரி ஓ லக்ஷ்மீபதே! தங்களது உத்தரவின்படி நடக்கும் க்ருதயுகத்தின் அதி தேவதை யான். இங்கு, தங்களது ஆபிர்பவித்தத்தைக் கேட்டு

தங்களைத் தர்ஶிக்க இங்கு வந்தேன். அகண்ட கால வடிவனை தாங்கள் கண்ட ரூபியாகவும் இருக்கின்றீர். நீர் மாயையினல் க்ஷணம், லவம், தண்டம், அஹோராத்ரம், பக்ஷம், மாஸம், ருது, அயனம், ஆண்டு, யுகம் முதலியவைகளைப் படைத்தீர். பதினுன்கு மனுக்களும் உங்கள் விருப்பப்படி மன்வந்த்ரத்தை நடத்துகின்றனர். ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர். சாக்ஷுஷர், வைவஸ்வதர், ஸாவர்ணி, தக்ஷஸாவர்ணி, ப்ரஹ்ம ஸாவர்ணி, தர்ம ஸாவர்ணி, ருத்ர ஸாவர்ணி, லோக ஸாவர்ணி, இந்த்ரஸாவர்ணி என்ற பதினுன்கு மனுக்களும் உங்களது அம்ஶமே. சில அம்ஶங்கள் வந்து சென்றன. சிலவை இருக்கின்றன. எல்லாம் தங்களது அம்ஶங்களே ஆனலும் நாம ரூபங்களால் பேதப்படுகின்றன. தேவர்களது பன்னிரண்டாயிரம் வருஷம் ஒரு சதுர் யுகமாகும். அங்ஙனமே தேவர்களுக்கு நாலாயிரம் வருஷம் க்ருதயுகம். மூவாயிரம் வருஷம் த்ரேதாயுகம். இரண்டாயிரம் வருஷம் த்வாபரயுகம். ஓராயிர வருஷம் கலியுகமாகும்.

தேவர்களது நானூறு வருஷம் க்ருதயுக பூர்வ ஸந்த்யையாகும். நானூறு வருஷம் உத்தர ஸந்த்யையாகும். அங்ஙனமே தேவர்களது முன்னூறு வருஷம் த்ரேதாயுக பூர்வ ஸந்த்யையாம். அங்ஙனமே தேவர்களது முன்னூறு வருஷம் த்ரேதாயுக உத்தர ஸந்த்யையாம். தேவர்களது இருநூறு வருஷம் த்வாபரபூர்வ ஸந்த்யையாம். இருநூறு வருஷம் உத்தர ஸந்த்யையாம். தேவர்களது ஒரு நூறு வருஷம் கலியுக பூர்வ ஸந்த்யையாம். ஒரு நூறு வருஷம் உத்தர ஸந்த்யையாம். ஆக தேவர்களது பன்னீராயிரம் ஆண்டுகள் ஓர் சதுர்யுகமாகும்.

இங்ஙனம் எழுபத்தோரு யுகம் ஒரு மன்வந்தர காலமாகும். பதினுன்கு மனுக்களுடைய காலம் பிரம்மாவின் பகலாகும். அதேபோல் பதினுன்கு மன்வந்த்ர காலம் இரவாகும். அஹோராத்ரம் பக்ஷம் மாஸம் ருது அயனம் ஸம்வத்ஸரம் என்பவை உம்மால் உண்டு பண்ணப்பட்ட உமது அம்ஶங்களேயாகும். இத்தகைய காலம் ஈ எறும்பு முதல் பிரம்மா வரையில் உள்ள அனைவருக்கும் ஜனன மரணங்களைத் தருவதாகும். நூறு வயதானவுடன் பிரும்மா உம்மிடத்தில் லயமாவார். மறுபடி உமது நாபிகமலத்திலிருந்து தோன்றி உலகைப்

படைக்கிறுர். அந்தக்காலத்தில் க்ருத யுகம் முடியும்வரை நான் க்ருதயுககால தேவதையாயிருந்து தர்மத்தைப் பரிபாலனம் செய்கிறேன். அச்சமயம் எல்லோரும் க்ருத க்ருத்யர்களாக செய்யவேண்டியதை செய்தவர்களாக இருப்பார்கள். ஆதலால் என்னை க்ருத என்ற பெயரால் அழைக்கிறுர்கள் என்று (க்ருதயுகம்) க்ருதயுக தேவதை விவரமாக எல்லாவற்றையும் விவரித்தவுடன் அதைக் கேட்டு அதிக ஸந்தோஷமடைந்த பகவான் தன்னுடைய பரிவாரங்களுடன் கூடி தனது யுகத்தில் ஜனங்களைப் பாபியாகச் செய்பவனும் பாபிகளைக் கொண்டு ஸாதுக்களை துன்புறுத்துகின்றவனுமான கலியோடு போர் புரிய விஶஸனமென்ற கலியின் நகரத்திற்குக் கிளம்பினுர்.

நால்வகைச் சேனையையும் பார்த்து "யுத்தகாலத்திற்கேற்ற அலங்காரங்களால் அலங்கரித்துக் கொள்ளுங்கள். பலவகை ஆயுதங்களை ஏந்தி யுத்தத்திற்குக் கிளம்புங்கள். இதில் மஹாவீரர்கள் யார் என பொறுக்கி எடுங்கள்'' என்று பகவான் கூறினுர்.

## த்ருதீயாம்சம் — ஆறும் அத்யாயம்.

இங்ஙனம் பகவான் கல்கி கூறியதைக்கேட்டு மருவும் தேவாபியும் விதிப்படி விவாஹம் செய்து கொண்டார்கள். பகவான் கூறியபடி திவ்ய ரதத்தின் மீது ஏறி அவ்விடம் வந்தார்கள். பலவகை ஆயுதங்கள் ஏந்திய ஸேனைகள் சூழவும் கரதலங்களுக்கும் மார்புக்கும் கைகளுக்கும் கவசம் தரித்தும் தலையில் இரும்புத் தொப்பியை அணிந்தும் சிறந்த வில்லுகளையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு ஆறு அக்ஷௌஹிணீ ஸேனைகளால் பூமியை நடுங்கும்படிச் செய்தார்கள். விஶாகயூப அரசன் லக்ஷம் கஜங்களாலும் லக்ஷக்கணக்கான குதிரைகளாலும் ஏழாயிரம் தேர்களாலும் வில்லேந்தி கவசமணிந்த யுத்த ஸந்நத்தர்களான இரண்டு லக்ஷம் காலாட்படைகளாலும் சூழப்பட்டு கல்கியினிடம் வந்தார். சிவப்பு வர்ணம் வாய்ந்த ஐம்பதாயிரம் குதிரைகளாலும் எண்ணிறந்த மஹா ரதங்களாலும் ஆயிரம் மதங்கொண்ட யானைகளாலும் முப்பது லக்ஷம் பதாதிகளாலும் நிறைந்த பத்து அக்ஷௌஹிணீ ஸேனைகளுடன் கல்கி புறப்பட்டார். ஜகதீஶ்வரனுன பிரபு; ஸஹோதரர், புத்ரன், நண்பர், ஸைனிகர், அனைவரும் சூழ திக்விஜயம் செய்யப் புறப்பட்டார். அச்சமயம் பலவானுன கலியினுல் விரட்டப்

பட்ட தர்மம் பிராம்மண உருவம் தாங்கி பகவானிடம் வந்தார்.

ருதம், பிரஸாதம், அபயம், சுகம், ஸந்தோஷம், ப்ரீதி யோகம், அர்த்தம், அஹங்காரமில்லாமை, கர்வமில்லாமை, ஸ்ம்ருதி, க்ஷேமம், ப்ரதிக்ஞை, பகவானது அம்ஸமான நரநாராயணர் இந்த புத்ரர்களேயும் அழைத்துக் கொண்டு தர்மர் வந்தார்.

ஸ்ரத்தை, நட்பு, தயை, சாந்தி, ஸந்தோஷம், புஷ்டி, க்ரியை, புத்தி, மேதை, பொருமை, நாணம், தர்மத்தை ரக்ஷிக்கும் மூர்த்தி முதலிய பெண்மக்களும் தனது பந்து கணங்களுடன் கூட தர்மதேவரைப்பின் தொடர்ந்தார்கள். கல்கியினிடம் தாங்கள் வந்த கார்யத்தைத் தெரிவிப்ப தற்காக தர்மதேவதை ப்ராஹ்மணனைப் போல் உருவெடுத்துவர பகவான் அவரை வரவேற்று தக்கபடி பூஜித்து விநயத்துடன் வினவினர். நீ யார்? எதற்காக இங்கு வந்தாய்? ஸ்த்ரீகளுடனும் புத்ரர்களுடனும் கூடி புண்யத்தை அநுபவித்தபின் ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்த ஒரு க்ரஹம்போல் காணப்படுகிறீர்! எந்த தேசத்திலிருந்து வருகிறீர்? உண்மையைக் கூறும். புத்ரர்களும் ஸ்த்ரீகளும் பலம் பௌருஷம் ஒன்றுமில்லாமல் தீனர்களாக காணப்படுகிறார்கள்! பாஷண்டர்களால் கண்டிக்கப்பட்ட வைஷ்ணவர்கள் போலிருக்கின்றார்கள், என்று பகவான் கல்கி கூறுவதைக்கேட்டு இனி தனக்கு சுகம் கிடைக்கும் என்று எண்ணி மிகப்பயந்து அநாதனாய் இருக்கின்ற தர்மன் தன் பரிவாரங்களுடன் நமஸ்காரம் செய்து மிக்க ஸந்தோஷமுள்ளவரும் தயை நிறைந்தவருமான பகவானைப் பூஜித்து துதித்துக் கூறினர்.

ஓ பகவன்! பிராம்மண உருவத்தோடு இருக்கின்ற நான் தங்களது மார்பிலிருந்து பிறந்த தர்மன். ஸகலமான ப்ராணிகளுக்கும் இஷ்டத்தை யளிப்பவன். தேவரில் சிறந்தவன். ஹவ்ய கவ்யங்களின் பலனைத் தருபவன். தங்களுடைய ஆக்ஞையால் நற்கார்யங்களையே செய்து ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன். இந்த ஸமயத்தில் ஸகன், கம்போஜன், ஸபரன் முதலிய வீரர்களுடன் சேர்ந்த பலிஷ்டனான கலியும் காலமும் எங்களை நிராகரித்து விட்டது. ஸம்ஸார மெனும் காலாக்னியால் தாபமடைந்த ஸாதுக்கள் உம்மை வந்து அடைவதுபோல் எல்லோருக்கும் ஆதாரமான உமது திருவடியை வந்து

அடைந்தோம். இங்ஙனம் தர்மனுல் ப்ரார்த்திக்கப்பட்ட பகவான் பரமஸந்தோஷ மடைந்து அவர்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு கூறினுர். ஓ தர்ம! க்ருதயுகத்தையும் சூர்ய வம்ஶத்தில் உண்டான மருவையும், நான் முகனது வேண்டுகோளால் உடல் எடுத்து வந்த என்னையும் நன்கறிவாய். ஆதலால் கஷ்டங்களிலிருந்து விடுபட்டதாக எண்ணி ஸௌக்யமாக இரு. விஷ்ணு த்வேஷிகளும் உனக்கு உபத்ரவத்தைச்செய்பவர்களுமான மற்றப் பகைவர்களையும் கொன்று எல்லோரையும் இரக்ஷிக்கின்றேன். ஆதலால் ஸேனைகளுடன் அச்சமின்றி நீ உலகில் ஸஞ்சரிக்கலாம்.

உனக்கு பயமேது? மோஹமேது? யக்ஞம், தானம், தபஸ், வ்ரதம் இவர்களுடன்கூட ஆங்காங்கு ஸஞ்சாரம் செய். ஸத்ய ரூபியான நான் உங்களைக் காப்பதற்கேற்ற முயற்சி செய்கிறேன். புத்ரர்களுடனும் பந்துக்களுடனும் நீ செல். உடனே யானும் வருகிறேன். ஜயத்தை நாடி ஶத்ருக்களை சிக்ஷிப்பதற்காகவும், திக்குத்திக்காக நன் செல்லுகிறேன் என்று கல்கி கூறிய வசனத்தைக் கேட்டு பரம ஸந்தோஷங் கொண்டு தனக்கு ஏற்பட்ட செல்வாக்கை நினைத்துத் தனக்கு நாதனும் கிடைத்தான் என்று எண்ணி ஆங்காங்கு ஸஞ்சாரம் செய்யக் கிளம்பினுன் தர்மன். ஸித்தாஶ்ரமத்தில் தன்னைச் சார்ந்த ஸ்த்ரீ புருஷர்களை அமர்த்தி ஸாதுக்களுடைய பூஜையால் வேதமெனும் மஹாரதத்தைக் கைக்கொண்டு ஸங்கல்பமெனும் சிறந்த வில்லை ஏந்தி பலவகையான அஸ்த்ர ஶஸ்த்ரங்களைத் தேடிக் கொண்டுவந்தான். ஸப்த ஸ்வரங்களே குதிரைகள். பிராஹ்மணரே ஸாரதி. அக்நியே ஆஸனம். பலவகை தர்மங்கள் என்ற ஸேனைகளுடன் கூடி தர்மன் ஸேனுதிபதியாக வந்தான். யக்ஞம் தானம் தபஸ் யமநியமம் முதலியவர்களுடன்கூடி, "கஶர் காம்போஜர், ஶபரர், பர்பரர்" முதலிய துஷ்டர்களை ஜயிக்க கல்கி, கலியின் இருப்பிடம் சென்றுர். அந்த இடம் பூத ப்ரேதங்களுக்கும், நாய், நரி முதலியவைகளுக்கும் இருப்பிடமாயிருந்தது. கோ மாம்ஸத்தினுல் துர்கந்தமுள்ளதும், காக்கை, கழுகு, நரி முதலியவைகள் சூழ்ந்ததும், ஸ்த்ரீகள் சொக்கட்டான் ஆடல், கலஹம் முதலியவைகளுக்கு ஆச்ரமமாகவும் இருந்தது.

மஹா கோரமானதும் உலகையெல்லாம் நடுங்கும்படிச் செய்வதும் பெண்களே தலைவியாக இருப்பதுமான

வீடுகள் உள்ளது கலியின் இருப்பிடம். விஶஸனம் என்ற அந்த நகரத்திற்குக் கல்கி வருகிறார் என்பதைக் கேட்டுக் கோபம்கொண்ட கலி, புத்ர பௌத்ரர்களுடன் கூடி, கோட்டான் கொடி பறக்கும் தேரில் ஏறி விரைந்து வந்தான். ரிஷிகளுடன் கூடிய தர்மர், கல்கியின் தூண்டுதலால் கலியை எதிர்த்துப் போர்செய்தார். ருதன் தம்பன், ப்ரஸாதன் லோபன், அபயன் க்ரோதன், ஸுகம் பயம், நரகம் ஸந்தோஷம் முதலியவர்கள் பற்பல ஆயுதம் தாங்கி ஒருவரோடு ஒருவர் போர் புரிந்தனர். அங்ஙனமே ஆதியுடன் யோகமும், (ஆதி என்பது மனக் கவலை) வ்யாதியுடன் க்ஷேமமும், ப்ரஶ்ரயம் எனும் வணக்கத்துடன் க்லானி எனும் வாட்டமும், ஸ்ம்ருதியுடன் கிழத்தனமும் சேர்ந்து மஹாகோரமாக யுத்தமாரம்பித்தனர். இப்போரைப் பார்க்க ப்ரஹ்மாதி தேவர்கள் தங்கள் வாஹநத்துடன் கூடி ஆகாயத்தில் சூழ்ந்து நின்றனர். பயங்கரமான பராக்ரமமுள்ள கசருடனும் காம்போஜருடனும் மரு யுத்தம் செய்தான். சீனர் பர்பரர் முதலியவர்களுடன் தேவாபி யுத்தம் செய்தான். விஶாகயூபன் எனும் மன்னன் வேடர்களுடனும் நீசர்களுடனும் பலவகை அஸ்த்ர ஶஸ்த்ரங்களைக்கொண்டு போர் புரிந்தான்.

கல்கி, சிறந்த ஆயுதங்கள் தாங்கிய ஸேனைகளுடன் கூட கோகர், விகோகர்களுடன் போர்புரிந்தார். அவர்கள் ப்ருஹ்மாவினிடம் பல வரங்களைப் பெற்றவர். ராக்ஷஸ வகுப்பைச் சார்ந்த ஸஹோதரர்கள். தேவர்களுக்கும் பயத்தை உண்டுபண்ணுபவர்கள். மதங்கொண்டவர்கள். ஒரே மாதிரி உருவமுள்ள மஹா பலசாலிகள். வஜ்ர சரீரம் வாய்ந்தவர்கள். கதையைக் கரத்திலேந்தி பதாதிகளாகப் போருக்கு வந்தனர். ஶும்பர் என்ற கோஷ்டியுடன் சேர்ந்து ஒருஸமயம் யுத்தத்தில் யமனைவென்றவர். கல்கி ஸேனைக்கும் அஸுர ஸேனைக்கும் மிகப் பயங்கரமாகப் போர் துவங்கிற்று. குதிரைகளுடைய கனைப்பு, யானைகளின் விறிடல், பற்களைக் கடித்தல், வீரவாதம், வில்லின் டங்காரம், வீரர்கள் தோள் தட்டுதல், தொடை தட்டுதல் முதலிய சப்தங்கள் திக்குகளில் எல்லாம் பரவி நிறைந்தன. உலகத்தில் உள்ளோர், தேவாஸுரர் அனைவரும் அதைக் கேட்டு நடுங்கினர். பாஶம், தண்டம், கத்தி, ஶக்தி, ஶூலம், கதை இவைகளின் தாக்குதலாலும் கோரமான பாணங்கள் விழுவதாலும் யுத்தத்தில் வீரர்கள்

ஆயிரக்கணக்காக அடிபட்டு, கை, கால்கள் முறிந்து, தலை யறுந்து பூமியில் விழுந்தனர்.

## த்ருதீயாம்சம் – ஏழாம் அத்யாயம்.

இங்ஙனம் மிகக் கோரமான யுத்தம் நடக்கும் பொழுது பரம கோபங்கொண்ட தர்மம், க்ருத யுகத் துடன் சேர்ந்து கலியோடு கோரமாக யுத்தம் செய்தது. தர்மமும் க்ருதமும் வர்ஷிக்கும் சரவர்ஷம் கலியைத் தாக்கி அவனைப் புறங்காட்டி ஓடும்படிச் செய்தது. தோல்வி யுற்ற கலி தனது கழுதை வாஹநத்தை யுத்த அரங்கத்தி லேயே விட்டுவிட்டு தனது நகரத்திற்குச் சென்றான். வாஹநமும் அடிபட்டது. கலியின் உடலெல்லாம் ஒரே ரத்த ப்ரவாஹம். பயங்கரமான முகத்துடன் பெண்கள் நாட்டாண்மை செலுத்தும் க்ருஹத்தில் நுழைந்தான். தம்ப னும் ரிதனது பாணத்தாலடிபட்டு போக பாக்யங்களையும் பலத்தையும் இழந்து தனது குலத்திற்கே தீயாய், தன் வீடு சேர்ந்தான். பிரஸாதன் கதையாலடிக்க லோபனது மண்டை உடைந்தது. நாய் வாஹநமும் அடிபட்டோட ரத்தத்தைக் கக்கிக்கொண்டு ஓடினனவன். அபயன் அடி யைத் தாளாமல் கோபத்தின் கண்கள் சிவக்க முஞ்சூறு வாஹனம் அடிபட்டு விழ அவனும் ஓடினன். இங்ஙனமே பயம் நரகம் ஆதிவ்யாதிகள் ஆகியவைகளும் அடிபட்டு திக்குகளில் ஓடி மறைந்தன.

தர்மம் கல்கி க்ருதயுகம் ஆகியவர் கலியின் அரண் மனையைப் பாணங்களால் தாக்கிக் கொளுத்தினர். மனைவி மக்கள் இறக்க உடலெல்லாம் தீப்பற்ற கலி பயந்து அழுதுகொண்டு தனியாக வேறு நாட்டிற்கு ஓடினன். மருராஜன் ஶகர்களையும் காம்போஜர்களையும் திவ்யாஸ் த்ரங்களால் தாக்கிக் கொன்றான். மஹா பலசாலியான தேவாபியும் திவ்யாஸ்த்ரங்களைக்கொண்டு ஶபரர் சோளர் பர்பரர் அவர்களைச் சார்ந்த கணங்கள் அனைவரையும் கொன்று குவித்தான். விஶாகயூப ராஜனும் புளிந்தர், புச்கஸர் முதலிய துஷ்டர்களைப் பலவகை ஆயுதங்களால் தாக்கிக் கொன்றான். ஸகல அஸ்த்ர ஶஸ்த்ரங்களையும் அறிந்த கல்கி கோக விகோகர்களுடன் உலகமே நடுங்கும் படி மிகப் பயங்கரமாக யுத்தம் செய்தார். அவர்கள் சகுநியின் பேரர்கள். விருகாஸுரனது புத்ரர்கள். மது கைடபர் போல் மஹா பலம் வாய்ந்தவர்கள். கதா யுத் தத்தில் கரை கண்டவர்கள். கதையால் கல்கியைத் தாக்கி

அவரது ஸந்திபந்தங்களை நொருக்கி அவர் கையிலுள்ள கதை கீழே விழும்படிச் செய்தனர். இதைக்கண்டு தேவர்களும் அஞ்சி ஐயோ! என அலறினர்.

ஸகல உலகையும் ஜயித்த பகவான் கோபங் கொண்டு பல்லம் என்ற ஆயுதத்தால் விகோகனுடைய சிரஸ்ஸை அறுத்துத் தள்ளினர். இறந்த விகோகன் ஸஹோதரனை கோகன் அருகில் வந்தவுடன் திடீரென உயிர்பெற்றெழுந்தான். இதைக்கண்டு ஸகல தேவர்களும் கல்கியும் ஆஸ்சர்யமடைந்தனர். மிகக்கடுங்கோபங் கொண்ட கோகன் தன் ஸஹோதரனது தலையை அறுத்துத் தள்ளிய கல்கியை கதையால் தாக்க வந்தான். பகவான் அவனது தலையையும் அறுத்தார். விகோகன் அவனைக் கண்ணால் பார்த்தவுடன் கோகனும் உயிர்பெற்றெழுந்தான். இருவரும் சேர்ந்து கால மிருத்யுபோல் பயங்கரமாக யுத்தம் செய்தார்கள். மிகக் கோபத்துடன் கத்தியினால் பகவானைப் பலமுறை வெட்டி வீழ்த்த முயற்சித்தார்கள். பகவான் உக்ரமான ஶரத்தால் இருவர் தலைகளையும் அறுத்துத் தள்ளினர். அறுபட்டு வீழ்ந்த தலைகள் உடலுடன் சேர மறுபடியும் போருக்கு வந்தார்கள். இதைக் கண்டு பகவான் சிந்தை கலங்கி நின்றார்.

அச் சமயத்தில் பகவானது வாஹநமான சிவனளித்த குதிரை அவர்கள் மீது தாவி, மாரில் காலால் உதைத்தது. ஆக்ரஹங்கொண்ட அவ்விரு அரக்கர்களும் சர வர்ஷங்களைக் குதிரை மீது வர்ஷித்தனர். குதிரை இருவர்களையும் மார்பில் கடித்து காலால் உதைத்தது. ஸந்திபந்தங்கள், வில், அங்கங்கள் எல்லாம் நொருங்கி கீழே விழுந்தன. அந்த ஸமயத்தில் குதிரையின் வாலை கெட்டியாகப் பிடித்துக்கொண்டனர். வேகமாக ஓடும் அதன் வேகத்தினால் மூர்ச்சை அடைந்து, தெளிந்து எழுந்தனர். குதிரை மறுபடியும் காலால் அவர்கள் மார்பில் உதைத்தது. பிரக்ஞையற்று கீழே விழுந்தனர். மறுபடியும் எழுந்து எதிரில் நிற்கும் பகவானைக் கண்டனர். அது ஸமயம் சதுர்முகன் கல்கியிடம் வந்து அஞ்ஜலிபந்தம் செய்து மெதுவாகக் கூறினர். பகவன்! இவர்களுக்கு அஸ்த்ர ஶஸ்த்ரங்களால் மரணமில்லை. கையினால் ஒரே ஸமயத்தில் இருவர்களையும் அடித்துக் கொல்ல வேண்டும். ஒருவரை ஒருவர் பார்க்காமலிருக்கும்படி எறிய வேண்டும். அப்படி யானால்தான் அவர்கள் இறப்பார்கள் என்று

சதுர்முகன் கூற, பகவான் அஸ்த்ர ஸஸ்த்ரங்களையும் வாஹநத்தையும் விட்டுவிட்டு கோக விகோகன் அருகே வந்தார். அவர்கள் பகவானை அடிக்கவர, கல்கி வஜ்ரம் போன்ற முஷ்டியால் இருவர் தலைகளையும் முறித்துத் தள்ளினர். தேவர்க்கும் மநிதர்க்கும் துன்பத்தை விளை வித்துவந்த இருவரும் கொம்பு முறிந்த காளைபோல் பூமி யில் விழுந்தனர். ஒருவரை ஒருவர் பாராதபடி தூரே தூக்கி எறிந்தார். ஆஶ்சர்யமான அச்செயலைப் பார்த்துக் கந்தர்வர், தேவர், அப்ஸரஸ், முதலிய கணங்கள், ஸித்தர், சாரணர், முனிவர் முதலியவர்களும் பூமாரி பொழிந்து ஸ்துதி செய்து ஆடிப் பாடிக் கொண்டாடினர். ஆகாயத் தில் துந்துபி முழங்கிற்று. திக்குகள் தெளிந்தன. இவ் விருவர்களையும் கொன்ற ஸந்தோஷத்தினால் ஆனந்த மடைந்த கவி என்பவர் அவனைச் சார்ந்த பத்தாயிரம் வீரர்களையும், அவர்களமர்ந்திருந்த தேர்களையும், குதிரை களையும், ஸாரதிகளையும் சேர்த்து பாண வர்ஷங்களால் கொன்றார். ப்ராக்ஞன் என்பவர் யுத்தரங்கத்தில் லக்ஷம் வீரர்களைக் கொன்றார். ஸுமந்த்ரன் இருபத்தைந்து ரத வீரர்களைக் கொன்றார். இங்ஙனம் கார்க்யர், பர்கர், விஶா லர் முதலியவர்களும் சினங்கொண்டு மஹா வீரர்களான நிஷாதர், ம்லேச்சர், பர்பரர்முதலியவர்களை ஆயிரக்கணக் காகக் கொன்றார்கள். இங்ஙனம் கல்கி அவர்களை யெல் லாம் வென்று இராஜ கணங்களுடனும் ஶய்யாகர்ணர் என்ற கோஷ்டிகளுடனும் கூட பல்லாட நகரம் என்ற ஊருக்குக் கிளம்பினர். உக்ரமான ஸேனைகள் வாய்ந்த கல்கி பலவகை அலங்காரமுள்ளவர்களும் பலவகை வாத் யம், வஸ்த்ரம், ஆபரணம் முதலியவைகளைத் தரித்து பகவானுக்கு சத்ர சாமராதி உபசாரங்களைச் செய்பவர் களுமான வீரர்களுடன் கூட புறப்பட்டார்.

### த்ருதீயாம்சம்—எட்டாம் அத்யாயம்.

## சசித்வஜ சரிதம்.

அஶ்வ வாஹனத்தில் அமர்ந்து சிவன் தந்த கத்தியை ஏந்தி பல்லாட நகரம் சென்றார் ப்ரபு. யோகீச்வரனை பல்லாட தேசத்தரசன் மஹா விஷ்ணுவே கல்கியாக வந் திருக்கிறார் என உணர்ந்து அவரோடு போர்புரிய ஸேனை களைத் தயார் செய்தான். அவ்வரசன் பகவானுடன் போர்புரிகிறோம் என ஸந்தோஷத்தினால் மயிர்க்கூச்சல்

உடையவனுகி, க்ருஷ்ணனைத் த்யானம் செய்துகொண்டு யுத்தத்திற்குத் தயாராஞன். ஶஶித்வஜன் என்ற அம் மன்னனுக்கு ஸுசாந்தா என்ற விஷ்ணு பக்தியுள்ள உத்தம பத்னி ஒருவள் இருந்தாள். விஷ்ணுவின் அவதாரமான கல்கியுடன் கணவன் யுத்தம் செய்யக் கிளம்புவதைக் கண்டு, நாதா! ஜகன்னுதனும் ஸர்வாந்தர்யாமியும் ப்ரபுவும் ஸாக்ஷாத் நாராயணனுமான கல்கியைத் தாங்கள் போரில் எப்படி அடிக்கப்போகிறீர்கள்? என்று வினவினுள். ஓ ஸுஶாந்தே! பிரும்மா, க்ஷத்ரியனுக்கு யுத்தம் செய்வதைச் சிறந்த ஸ்வதர்மமாக ஏற்படுத்தி இருக்கிறுர். யுத்தத்தில் குருவானுலும் சிஷ்யனுனுலும் பின்வாங்கலாகாது. ஜீவனேடுள்ளவரை ராஜபோகம்! யுத்தத்தில் இறந்தால் ஸ்வர்க்கமும் கீர்த்தியும் கிடைக்கும்! என்று அரசன் கூற, ஸுஶாந்தை கூறினுள். நாத! அரசுரிமை தேவத்வம் எல்லாம் விஷயஸுகத்தில் ஆசைப் பட்டவர்களுக்கன்ருே தோன்றியது? விஷ்ணு பக்தர்களுக்கு அதில் விருப்பேது?

தாங்கள் விஷ்ணுஸேவகர்! பகவான் ஈஶ்வரன்! பக்தர் ஆசையற்றவர்! பகவான் ஒரு கர்மபலனையும் தராதவர். இத்தகைய உங்களிருவர்க்கும் மோஹத்தினுல் யுத்தம் எப்படி உண்டாகப் போகிறது? என்ருள் ஸுஶாந்தை. அவள் கூறிய நன் மொழிகளைக் கேட்டு ஶஶித்வஜன் கூறினுன். ஈஶ்வரன், ஸுக துக்காதி த்வந்த்வங்களை விட்டவர். பக்தனும் அப்படியே. தேஹ ஸம்மந்தத்தால் இருவர்க்கும் யுத்தம் நேர்ந்தால் அது லீலா ரூபமான ஸேவையே ஆகும். உடல் எடுத்ததால் பகவானுக்கும் உடலைப்பற்றிய காமாதி குணங்கள் உண்டாகலாம். மாயையால் பகவானுக்கு உடல் ஏற்படுமானுல் விஷயங்களும் ஏன் உண்டாகக் கூடாது? பகவான் ஸர்வேஶனுக இருந்தால் ப்ரும்ம ஸ்வரூபியாவார். ஶரீரமெடுத்தால் அவரும் ஒரு ஜீவனுவார். பகவானைத் தவிர நான் வேரல்ல என எண்ணும் ஸேவகனுக்கும் அவரைப்போலவே கல்பிதமான ஜநந மரணங்கள் ஏற்படுகின்றன. பகவான் ஸேவிக்கத்தக்கவன். நாம் ஸேவகர் என்ற எண்ணமே விஷ்ணு மாயையால் உண்டாவது, பகவான் ஒருவரே உலகமாகின்ருர். அத்வைத விசாரமின்றி அவர் வேறு நாம் வேறு என்ற த்வைத எண்ணத்தால் தர்மம் அர்த்தம் காமம் என்ற த்ரீவர்க்கமே உண்டாகும் என ஸத்துக்கள் நினைக்கின்றனர்.

Printed & Published by A. Venkataraman at The Sri Meenakshi Press, Sirkali.

Editor: Srivathsa V. Somadeva Sarma.